உ
சிவமயம்

# திருக்குற்ருலம்

## தல வரலாறு

திருக்குற்ருலநாதசுவாமி கோயில் ஆட்சித் தர்மகர்த்தர்
அட்வகேட A. C. ஷண்முகநயினுர் பி. ஏ., பி. எல்.,
எழுதியது

கோயில் வெளியீடு.

1958.

 [ஐந்தாம் பதிப்பு

உ
சிவமயம

# உள்ளடக்கம்.





# நிர்வாகம்.

( 1958 )

A. C. ஷண்முகநயினர், பி. ஏ., பி எல்.,
(அட்வகேட்) ஆட்சித்தர்மகர்த்தா.

H. நவநீதகிருஷ்ண மருதப்ப பாண்டியன்,
(பெருநிலக்கிழார்)

T. P. K. S. சங்கர முதலியார்,
தர்மகர்த்தர்கள்:

---

R. ராமையா நாயுடு, பி. ஏ.
எக்ஸிகியூட்டிவ ஆபீஸர்.

# முகவுரை.

டி. கே. சிதம்பரநாத முதலியார், **திருக்குற்றாலம்,**
திருநெல்வேலி ஜில்லா.

சென்ற முப்பது வருஷங்களாக நம்முடைய குற்றாலத்துக்கு ஏராளமான பேரகள் வருகிறார்கள். சென்னையிலிருந்தும், அதற்கப்பாலுள்ள இடங்களிலிருந்தும வருகிறார்கள். வந்தவுடன் எத்தனையோ கேளவிகளைக் கேட்கிறாரகள் பூரவ சரிததிரம என்ன? சுவாமி பேர எனன? அம்பாள் பேர் எனன? சுறறுததேவதைகள என்ன? காட்சிக்கான இடஙகள என்ன எனன? என்றெலலாம கேட்கிறாரகள். கேள்விகளுக்கெல்லாம் பதில் அளிப்பது கஷ்டம். யாருக்குமே கஷ்டநதான.

எல்லா விஷயஙகளையும் பல திறப்பட்ட வகையில் ஆராய்ந்து நல்ல முறையில் கோவைசெய்து புஸ்தகரூபமாக அட்வொகேட், **ஏ. ஸி சண்முக நயினார் பிள்ளையவர்கள்** நமக்குத் தந்திருக்கிறார்கள். நயமபட எழுதிய புஸ்தகம். தூரத்திலிருநது வநதவரகளுக்கோ புஸதகம் அனுபவிக்கததக்கதாய்இருக்கும. குறறாலத்தை யொட்டி வசிக்கிறவரகளுக்கோ (ஆடவர, பெண்டிர, சிறுவர், சிறுமியர) எல்லாருக்கும், ஒரே ரஸமாயிருக்கும. வர்ணனைகளும் சரிததிரக் குறிப்புகளும அடிக்கடி பார்த்து அனுபவிக்கக்கூடியவைகள். தமிழுக்கும், தமிழ் நாட்டினருக்கும் அருமையான தொண்டு புரிந்திருக்கிறார்கள் பிளளையவர்கள்.

வரலாறு புஸ்தகம் மூலமாகவும், சமய சம்பந் தமான பாசுரங்களைச் சுவரில் எழுதுவது காரண மாகவும் வேறு பல கோயிலகள்போல் திருக குற்றாலநாதர் கோயிலும் அபூர்வமான விளக்கம் பெற்றிருக்கிறது. இந்த விளக்கம் பறறி ஹிந்து சமய அறநிலையப் பாதுகாப்பாளரகளுக்கும் திருக் குற்றாலநாதர் தேவஸ்தான தர்மகரத்தரகளுக்கும் நாம் ரொமபவும் கடமைப்பட்டிருக்கிறோம. இந்தத துறையில் முனைநது தொண்டாற்றும் கமிஷனர ராவ்பகதூர் **ஸி. எம். ராமச்சந்திரம் செட்டியார் அவர்களுக்கு** பக்தர்களது மனமார்ந்த நன்றி உரித்தாயிருக்கிறது.

(ஒப்பம்) டி. கே. சிதம்பரநாத முதலியார்,
28—5—'43

# பதிப்புரை.

இப்புத்தகம "திருக்குற்றாலத் தலவரலாற்றின்" ஐந்தாம பதிப்பு. திருக்குற்றாலத்தைப் பற்றிய விவரங்களெல்லாம் அறிந்துகொள்ள இஙகு வருகின்ற பொதுமக்களனைவரும் விரும்புகிறாரகள். இவரகள் விருப்பத்தை இப்புத்தகம் நிறைவேற்றுமெனறு நம்புகிறோம். புத்தகம் சிறிதாயினும அதில் இவ்வூரைப்பற்றிய பலதிறப்பட்ட விஷயஙகள அடஙகியிருக்கினறன. கோயில் வரலாறு மட்டுமனறி ஆரோக்கியம, இயற்கை வனப்பு, தட்பவெட்ப நிலமை, வசதிகள், குற்றாலத்தைப்பறறிய இலக்கியம் முதலியவைகளைப் பற்றியும் தெளிவாக எழுதப்பட்டிருக்கிறது. இப்புத்தகததைப்படித்து யாவரும் நல்ல பயனடைய வேணடுமெனற நோக்குடன விலையைக் குறைததிருக்கின்றோம்.

திருக்குற்றாலம் அகில இந்திய புகழ்பெற்று வருவதால் அதைப்பற்றி யாவரும் தெரிந்துகொள்ளவேணடியது அவசியம். காசி, ராமேஸ்வரம் போன்ற சில ஊர்கள் உலகப்புகழ்வாய்ந்த க்ஷேதரமாயிருக்கலாம. உதகமண்டலம், சிம்லா போனற சில ஊரகள் இயற்கை வனப்பு நிரம்பிய ஆரோக்கிய தலமாயிருக்கலாம். இவை போன்ற ஊர்களுக்கு யாவரும் எளிதாய்ப் போய்வர முடியாது. ஆனல் திருக்குற்றாலத்திலோ தலப் பெருமை தவிர அருவியிற் குளிப்பதற்குரிய வசதி, ஆரோக்கியம், முதலிய பெற்று அனுபவிக்கலாம்.

சுற்றிலும் இயற்கை அன்னையின் அழகைக்கண்டு களிக்கலாம். விசேட ஆடைகள், வாகனங்கள், ஆடம்பரங்கள், செலவுகள் இல்லாமல் நாம் நம்முடைய இல்லங்களில் வாழ்வதுபோலவே செல்வர் ஏழை யாவரும் ஓர் இனிமையுடன் வாழலாம்.

இத்தலத்தைப்பற்றிய புராணம், குறவஞ்சி, மாலை, ஊடல், யமகவந்தாதி, உலா, சிலேடை வெண்பா, பரம்பொருள்மாலை, திருக்குற்றாலக் கோவை எளிய விலைக்கு கோயில் ஆபீசில் கிடைக்கும்.

1—5—'58. தர்மகர்த்தர்கள்.

சிவமயம்

# திருக்குற்றாலத் தல வரலாறு.

வம்பார் குன்றம் நீடுயர் சாரல் வளர்வேங்கைக்
கொம்பார் சோலைக் கோலவண் டியாழ் செய்குற்றாலம்
அம்பால் நெய்யோ டாடல மர்ந்தா னலர்கொன்றை
நம்பான் மேய நன்னகர் போலும் நமரங்காள்.

—*திருஞானசம்பந்தர்.*

சீர்மன்னு செல்வக் குடிமல்கு சிறப்பி னோங்குங்
கார்மன்னு சென்னிக் கதிர்மாமணி மாடவைப்பு
நார்மன்னு சிந்தைப் பலநற்றுறை மாந்தர்போற்றும்
பார்மன்னு தொன்மைப் புகழ்பூண்டது பாண்டிநாடு.

—*திருத்தொண்டர் புராணம்.*

## தோற்றுவாய்

*தெய்வமணக்குஞ் செய்யுளியற்றுஞ் சேக்கிழார் பெருமானாற் போற்றப்பட்ட இப்புண்ணிய நாடாகிய பாண்டிய நாட்டிலுள்ள சிவஸ்தலங்கள் பதினான்கினும் மிகத் தொன்மையினாலும், தலம் தீர்த்தம் மூர்த்தி விசேடத்தாலும், இயற்கை அன்னையின் எழில் நலங்களாலும், வந்து உறைபவர்களுக்கு உடல் நலம் பேணி மன நலம் பாலிக்கும் பான்மையினாலுஞ் சிறந்து விளங்குவது திருக்குற்றாலம். இத்தலம் திருநெல்வேலி ஜில்லா தென்காசித் தாலூகாவில் தென்காசி ஊருக்குத் தென்மேற்கே 3½ மைல் தூரத்திலுள்ள மேற்குத்தொடர்ச்சி மலையினடியிலுள்ளது. திருநெல்வேலி-திருவனந்தபுரம் ரயில்பாதையும், விருதுநகர் - தென்காசி குறுக்குப்பாதையுஞ் சந்திக்கின்ற தென்காசி ரயில்நிலையத்திலிருந்து தென்மேற்கே இருக்கின்ற இத்தலத்திற்கு நல்ல*

கற்பாதைகளுண்டு. வடக்கே மதுரை, ஸ்ரீவில்லிபுத்தூர், இராஜபாளையம், சிவகிரி புளியன்குடி முதலிய ஊர்களிலிருந்தும், கிழக்கே திருநெல்வேலி திருச்செந்தூர் முதலிய தலங்களிலிருந்தும், தெற்கே அம்பாசமுத்திரம், பாவநாசம் முதலிய இடங்களிலிருந்தும், மேற்கே திருவாங்கூரைச் சேர்ந்த செங்கோட்டை, கொல்லம் முதலிய இடங்களிலிருந்தும் நல்ல கற்பாதைகள் வருகின்றன.

இத் தலத்துக்கு வருகின்ற கற்பாதைகளிலெல்லாம் இருபுறமும் மரங்கள் அணியணியாய் நின்று கதிரவன் கிரணங்கள் தெரியாமல் நிழல் கொடுக்கும். திருக்குற்ருலத்திற்குச் சமீபமாக ஐந்துமைல் சுற்றளவுவரை இப்பாதைகள் கண்கவருந் தோற்றமளிக்கும். குரங்குக் கூட்டங்கள் சாலைகளில் தாவிக் குதித்து விளையாடிக்கொண்டிருக்கும். எம்மருங்கும் சோலைகளும் செந்நெற் கழனிகளும் நந்தவனங்களும் நீர்நிலைகளும் மண்டபங்களும் தூரத்தில் மலையின் நீலநிறச் சாயலும் பார்ப்பவர் மனதையள்ளும். இவ்வழகு நிரம்பிய இடத்தில் பார்க்கப்பார்க்க வசீகரிக்கும் அழகின் சிகரமாய்த் திகழ்வது திருக்குற்ருலம்.

## மலை வளம்

இவ்வூர் கடல் மட்டத்துக்கு மேல் 550 அடி உயரத்திலுள்ளது. இங்குள்ள மேற்குத்தொடர்ச்சி மலை மேற்கே 10 மைல் தூரத்திலுள்ள ஆரியன்காவுக் கணவாயிலிருந்து உயர்ந்துகொண்டே வந்து 2 மைல் அருகிலுள்ள ஐந்தருவி முதல் 5000 அடி வளர்ந்து குற்ருலத்தைக் கடந்து தெற்கே பொதிகைமலை நோக்கிச் செல்கின்றது. இங்கே அதிக உயரமுள்ள சிகரம் 'பஞ்சந்தாங்கி' என்று அழைக்கப்படுகிறது. (உயரம் 5135 அடி) இச்சிகரம் நாட்டின் பிற பாகங்கள் மிகக்

கொடுமையான பஞ்சத்தால் வாட்டமுறுகின்ற காலத்திலும் இவ்விடங்களில் மழைக்குக் காரணமாயிருந்து அத்துன்பம் வாராமற்றடுத்து மக்களைத் தாங்குவதால் பஞ்சந்தாங்கி எனக் காரணப் பெயர்பெற்றது. குற்றாலமலை உச்சியில் மூன்று சிகரங்களையுடையதால திரிகூடமலை அல்லது திரிகூடாசலம் என்று வழங்கப்படுகிறது அழகு செல்வம் நிறைந்த மலை யாதலான் திருகூடமலையெனக் கூறுபவர்களும் உண்டு. இம் மலையிலுள்ள காடுகளுக்கு செண்பகக்காடு என்று பெயர்.

இம்மலை ஓங்கி வளர்ந்தும் நிமிர்ந்தும் படுத்தும் வீங்கியும் மெலிந்தும் தொடர்ந்தும் ஒன்றன்பின் ஒன்றும் சேர்ந்தும் பிரிந்தும் பலவகைத் தோற்றமளிக்கும். தேக்கு, மயிலை, கோங்கு, அத்தி, புன்னை, ஆல், இலுப்பை முதலிய மரங்கள் செறிந்து அடர்ந்திருக்கும். தென்னை, மா, பலா, கமுகு, வாழை, ஏலம் கிராம்பு, சாதிக்காய், சந்தனம், மாங்குஸ்தான் முதலிய மரங்கள் பழுத்து நறுமணம் வீசும். மல்லிகை, செண்பகம், மகிழ், முல்லை, வெட்சி, பாதிரி முதலிய மலர்கள் பூத்து வருகின்றவர்களை வாவென்று உபசரிக்கும். மரக்கொம்புகளினின்று தொங்கும் பசிளங் கொடிகளும் பூங்கொடிகளும் இயற்கையன்னை தன்னை அலங்கரித்திருக்கின்ற அணிகலன்கள் போலத் தோன்றும். மலையின் தளத்தில் குறுஞ்செடிகளும் சஞ்சீவி முதலான விஞ்சை மூலிகைகளும் பரந்து கிடக்கும். யானை, புலி, நரி, மான் முதலிய காட்டு விலங்குகள் கவலையின்றித் திரியும். பறவையினங்கள் இசை பாடிக்கொண்டிருக்கும் மழை காலங்களில் மரங்களையும் மலைகளையும் ஊடுருவித் தண்ணீர் அருவிகளாய்க் குதித்து விளையாடிக் கால்களாகவும் ஆறுகளாகவும் ஓடும். இக்காலங்களில் மலையின் தோற்றம் மரகத (பச்சை)ப் பாயில் வைரங்களைக் குவித்து வைத்ததுபோலிருக்கும்.

பசசை மலை நீலவானையளாவி நிற்கும மெல்லிய பஞ்சு போன்ற மேகங்கள் பறபல வடிவங்களில் மலையினுச்சியில் தவழ்ந்தும விண்ணிற்பறந்தும விளையாடும வெண் முகிலும கருமுகிலும் முழவு கொட்ட மயிலினங்கள் ஆடும மந்திகள் குட்டிகளை வயிற்றிற் சுமந்துகொண்டு மரங்களிலுள்ள கனிகளைச் சூறையாடிக கடித்துக தேமொழுகியும். அக்கனிகள் தேன் பிலிற்றும். இத்தகைய காட்சிகளிடையில் இககாட்டிலே பிறந்து மரக்கிளையாகிய தொட்டிலிலே விளையாடி நிலத்திலே தவழ்ந்து திரியும 'தென்றல்' என்னும ஓர் பிள்ளை. தென்றற் காற்றை மந்தமாருதம என்று தலபுராணங்கூறும. திருக குற்றால வளங்களைத் திருககுறறாலக குறவஞ்சி ஆசிரியர் இவ்வாறு சித்தரிககிறார்.

வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சும்
மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள கெஞ்சும்
தேனருவித திரையெழுமபி வானினின்வழி யொழுகும
செஙகதிரோன பரிககாலும தேர்க்காலும வழுகும
முழஙகுதிரைப் புனலருவி கழஙகெனமுத் தாடும்
முறறமெஙகும பரநது பெணகள சிற்றிலைககொணடோடும்
செழுஙகுரஙகு தேமாவின பழஙகளைப பந்தடிககும
தேனலா சணபகவாசம் வானுலகில வெடிககும
ஆடுமர வீனுமணி கோடிவெயி லெறிக்கும்
அம்புலியைக் கவளமென்று தும்பிவழி மறிக்கும்

செல்லினஙகள முழவுகொட்ட மயிலினஙகள ஆடும்
திரிகூட மலை எஙகள செல்வமலை யமமே

---

காட்டுக கனியழித்துங் கான்யாறு நீர்செழித்துங்
கோட்டுக குரஙகுறையுங குற்றாலம்.

## நில வளம்

ஆற்றில் வாளைமீன்கள் குதிக்கும். அலைகள் செம்பொன்னிற மணல் கொழிக்கும். மேதிகள் சேற்றை யெல்லாங் கலக்கும். அச்சேற்றில் பூக்கள் மலரும். பூக்களினின்று சொட்டுந்தேன் நாற்றுகளில் பாயும். ஆற்றின் இருபுறமும் பசுஞ்சோலை அடர்ந்திருக்கும் வயல்கள் பாத்திகளாகப் பரந்து சூழ்ந்திருக்கும். திருவீதிகளில் திருநீறு பூசிய தொண்டர்கள் புடைசூழக் கொடிகள் வீச எப்போதும் விழாக்களின் ஆரவாரம் மலிந்திருக்கும். இவ்வூர் மக்கள் பொதுக்கழகங்கள் கூடித் தமிழ்மொழியைக் கற்றும் கற்பித்தும் ஆராய்ந்தும் மொழி வளம் பெருக்குவார்கள்.

ஆறெலாங் குதிக்கும்வாளை யலையெலாங் கொழிக்குஞ்செம்பொன்
சேறெலா முழக்கு மேதி செய்யெலா முகிழ்க்கு நீலம்
நாறெலா வளர்க்கும் பூந்தேன் நாடெலாம் வளர்க்குஞ்செங்கோல்
சாறெலாம் வளர்க்கும் வீதி தமிழெலாம் வளர்க்கும்
மன்றம் — தலபுராணம்

இவ்வருங் காட்சிகளை இன்றுங் கண்கூடாகக் காணலாம்.

## ஆறும் அருவியும்

இங்கே பாய்கின்ற நதிக்குச் சிறிய ஆறு என்று பொருள்படுஞ் சிற்றாறு என்று பெயர். பெயர் சிற்றாறு எனினும் பெருமை மிக்கது.

‘ சிற்றாறெனபது பெற்றாலும் ஒரு
சிறியவா றெனப் பெருமைபோல
சித்ரா நன்னதி பெருகிவார
சித்ரம் பாரும் பள்ளிரே ”

என்று முக்கூடற் பள்ளு ஆசிரியர் புகழ்கின்றார். ஓவிய அழகுள்ள ஆறு என்று பொருள்படும் சித்திரா நதி என்

றழைப்பது புராண வழக்கு. இந்த ஆறு, திரிகூடமலையிற பிறந்து மலையின்மேல் முதன்முதலில் 100 அடி உயரத்தி லிருந்து பூப்போலச சொரிந்து விழுகின்றது. இந்த வீழச சிக்ருத் தேனருவி என்று பெயர் தேன் போன்று மெல்லிய ஒழுக்குடையதாய் காண இனிமையதாயிருப்பதாலும் இப பக்கத்தில் தேன் கூடுகள் மிகுதியாகக கிடைபபதாலும இப்பெயர்வந்தது மலையடியிலிருநது சுமார 3 மைல் தூரததி லுள்ளது. இங்கே இயற்கையணங்கு அழகையெல்லாநதிரட்டி யலங்கரித்துத் தன்னைக் காண்பவர்களை மயக்குகினறுள்.

இதற்கு $1\frac{1}{2}$ மைலுக்குக் கீழே இந்த ஆறு செண்பக அடவி என்னுமிடத்தில் 30 அடி உயரமுள்ள அருவியாக விழுகின்றது இறுதியில் குற்ருலத்தில் 288 அடி உயரத்தி லிருந்து குதிககின்றது. 288 அடி தூரமும ஒரே வீழ்சசி யாய் விழாமல் மத்தியில் ஒரு துறையில் விழுநது பொங்கிப் பாந்து விரிநது கீழே விழுகின்றது. பொங்கி மேலெழுங் காரணத்தால் இத்துறை பொங்குமாகடலென்றும முதலில் மலையினின்று குதிக்குமிடம் மாமரங்கள் அடர்ந்த காடான தால் மாவடித்துறையென்றும வழங்கப்படுகின்றன. கீழே விழுகின்ற இடத்தில் இந்த அருவியை 'வற்ருத வடஅருவி' யென்று தலபுராணம புகழும. அருவி விழுமிடமெல்லாம பாறைகளிற் சிவலிங்கங்கள் காட்சியளிக்கின்றன.

அருவியில் நீராடுகின்றவர்கள் வசதிகளைக் கவனிக்க அருவிச்சங்கம ஒன்று ஏற்பட்டு அரசாங்க அநுமதிபெற்று நல்ல வேலை செய்து வந்தது. இசசங்கம் இப்போது டவுண் ஷிப் கமிட்டியுடன் இணைக்கப்பட்டு விட்டது. முன்னிருந்த அருவிக் கட்டம் வழக்குப்படிந்து சரியான பாதுகாப்பு இல்லாமல் சிற்சில உயிர்சசேதங்கள் ஏற்பட்டமையால்

இதைத்தடுக்க இசகில்லா பழைய கலெக்டர் A. M. C. காலட்டி துரையவர்கள் ஊக்கத்தாலும் காருடுகாத்தான், S. A. அண்ணாமலைச் செட்டியாரவர்கள் போன்ற பரந்த நோக்குடையவர்களின் பொருளுதவியாலும் அருவியினடியில் ஓர் மேடை அமைக்கப்பட்டுப் பாதுகாப்புக்காக இரும்புக் கம்பி அளிகள் போடப்பட்டிருக்கின்றன. முன் 20 பேர் பயமின்றிக்குளிக்க முடியாத இடத்தில் இப்போது ஒரே காலத்தில் சுமார் 200 பேர் மன அமைதியுடன் குளிக்க வசதி அமைந்திருக்கின்றது. பெண்கள் தனியாய் மறைவுடன் குளிக்கவும் வசதியமைந்திருக்கிறது குளிக்கும்போது ஆடை முதலியவற்றை வைத்துக்கொள்ளவும் பின் அணிந்து கொள்ளவும் அருவிசசங்கத்தார், கோயம்புத்தூர் ராவ் பகதூர் திரு கோபால நாயுடு அவர்களின் தாராளமான பணஉதவியினால் அருவிப்பக்கத்தில் பல அறைகள் கட்டி அவை எளிய வாடகைக்குக் கொடுக்கப்படுகின்றன. திருவாளர் திருப்பூர் K. பெருமாள் செட்டியார் அவர்கள் உதவியால் பொதுமக்கள் இலவசமாய்த் தங்க ஒரு கல் மண்டபம் கட்டப்பட்டிருக்கிறது.

அருவியினடியில் நீந்தி விளையாடுவதற்கேற்ற ஒரு சிறு குளமிருக்கிறது இக்குளத்தின் கீழ்ப்பக்கமாய் வடவருவிக்குச்செல்ல ஓர் சிறுபாலம் இருக்கிறது. நதி பாறைகளில் மோதியுந் தவழ்ந்துஞ் செல்கின்ற வழியில் சந்தியாவந்தனம், நித்தியானுஷ்டானம் சிவபூஜை முதலியன முடிப்பதற்குரிய மண்டபங்களும் படித்துறைகளும் ஆற்றை அழகுபடுத்துகின்றன அருவிப்பக்கத்தில் கோயிலார் மண்டபமும் சில அறைகளும் எதிரே தீர்த்தவாரி மண்டபமும் இருக்கின்றன. கங்கையாகிய அருவிக்கும் பாறைகளிலுள்ள சிவலிங்கங்களுக்கும் அன்றாடக பூசை ஒழுங்காக நடந்து வருகின்றது.

இந்த அருவியின் தோற்றமும் சூரவையும் நம்மனதை ஈர்க்கும். சற்றே உலகக் கவலைகளை மறைத்து மன அமைதி கொடுத்து ஒருவித உயர்ந்த நிலையில் புகுத்திவிடும். இவ்வளவு நற்குணங்கள் நிறைந்த நீரோட்டத்தின் அழகையும் அதனை அலங்கரிக்கும் மண்டபங்களின் நோக்கத்தையும் உணர்ந்து 'ஓடக்காண்பது பூம்புனல் வெள்ளம் - ஒடுங்கக் காண்பது யோகியர் உள்ளம்' என்று திருக்குற்றாலக் குறவஞ்சி ஆசிரியர் புற அழகையும் அக அழகையுங் கூட்டிப் புளகிக்கின்றார்.

ஐந்தருவிப் பாதையில் மலைமேல் சற்றே $\frac{1}{2}$ மைல் தூரத்தில் சிற்றருவியென்று ஓர் அருவியுண்டு. இங்கே காட்டு இலாகா அதிகாரிகள் அனுமதியின்றிச் செல்லமுடியாது. மேற்கே இரண்டு மைல் தூரத்தில் சிற்றாற்றின் ஓர் பிரிவு ஐந்து அருவிகளாக விழுகின்ற காட்சி கண்டு இன்புறத்தக்கது. இதற்கு ஐந்தருவியென்று பெயர். ஐந்துதலையருவியென்றுங் கூறலாம். நல்ல வண்டிப்பாதையுண்டு. மக்கள் சமையல் செய்துகொள்ள வசதியாய் ஒரு பெரிய பாறை பந்தல்போல் நின்று நிழல் கொடுக்கும். இதற்கு அடுக்களைப் பாறை என்று பெயர். அருவியில் மக்கள் வழுக்கி விழாமல் மனஅமைதியுடன் நீராடப் படிகள்கட்டி தளங்கள் புதிதாக அமைக்கப்பட்டும் பாதுகாப்புக்காக இரும்புக் கம்பிஅளிகள் போடப்பட்டுமிருக்கின்றன.

திருக்குற்றாலத்தின் கிழக்கே $\frac{3}{4}$ மைல் தூரத்தில் இவ்வாற்றின் ஒரு கால்வாய் அருவியாக விழுந்தோடுகின்றது. இதற்குப் பாசுபத சாஸ்தா அருவியென்று பெயர். சாரற் காலத்தில் வடவருவியில் எப்போதும் மக்கள் கூட்டம் நிறைந்திருக்குமாதலால் அநேகர் குளிப்பதற்காக இங்கே

செல்வது வழக்கம். இதன் பக்கத்தில் பழைய குற்றாலத் தலம் இருக்கிறது. இங்கு அருவியாய் விழுகின்ற நதிக்கு அழகனாறு என்று பெயர். இது கொஞ்சதூரத்தில் சிற்றாற்றுடன் கலக்கின்றது. இங்குள்ள காட்சியும் மிக வனப்பாயிருக்கும். இந்த ஆற்றை இப்போது அழுகிணியாறு, அழுத கண்ணீர் ஆறு எனத் திரித்துக் கூறுகின்றார்கள்.

செண்பக அடவியிலுள்ள அருவி, தேனருவிகளுக்குப் பாதித்தூரம் வரை நல்ல பாதைகள் உண்டு. குறுக்குப் பாதைகளும் உண்டு. பாதித்தூரம் ஓரடித்தடமான காட்டுப் பாதையாயிருக்கும். ஆயின் இசசோலைப்பாதைவழி நண்பர்களுடன் செல்ல உற்சாகம் உண்டாகும்.

## திருக்குற்றாலம் ஆரோக்கிய தலம்

திருக்குற்றாலம் புகழ்பெற்ற ஒரு புண்ணிய தலமட்டுமல்ல, உடல் நலத்தைப்பேணும் ஓர் அரிய தலமுமாகும். இவ்வூரின் தட்பவெட்ப நிலைமை உடல்நலம் பேணுதற்கும் வளர்த்தற்கும் நன்றாகப் பயன் படுகின்றது. சோலை சூழப் பெற்றிருப்பதால் சூரிய வெப்பம கடுவேனிற் காலத்திலும் குறைநதே காண்கின்றது

மேடைத்தளமு மதிள்மென் கொடியுஞ் செங்கதிரோன்
கோடைக்கு வாடைதருங குற்றாலம்

என்பது இவ்வூரின் இயல்பு. இவ்வூர் இருக்குமிடமும் தட்பவெட்ப நிலைமையும் உடல்நலத்துக்கேற்றவாறு அமைதற்கு அநுகூலமாயிருக்கின்றது. மேற்குத் தொடர்ச்சி மலையிலுள்ள பெரிய வெளியாகிய ஆரியன்காவுக்கணவாய் பக்கத்திலிருப்பதால் அக்கணவாய்க்கு மேற்பக்கம் எழுகின்ற தென்மேற்குப் பருவக்காற்றும் மழையும (South west monsoon) அக்கணவாய் வழியே வீசி கிழ்ப்பக்கத்திலிருக்கின்ற குற்று

லத்தில் இளங்காற்றாகவுஞ் சிறுமழையாகவும் அமைகின்றன. இக்காற்றைச் சாரநாறறென்றும் மழையைச் சாரல் என்றும் கூறுவார்கள். வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி மாதங்களில் இந்த ஜில்லாவிலுள்ள மற்றப்பாகங்கள் காற்றும் மழையுமின்றி வருந்துமபோது இங்கே இந்த நல்லகாற்றும் இளமழையுங் கிடைக்கின்றன. மழை பெய்தாலும் பெய்யாவிடினும இக்காலக் கருமேகங்களினூடே பசசை மரங்கள் கொடிகள், செடிகளை முகநது வீசுகின்ற காற்றானது சூரிய வெப்பத்தை 15 மாததிரை (degree) வரை குறைத்து மனதுககு ரம்மியமானதும உடலுககு உகந்ததாகவுமுள்ள ஒரு அரிய சீதோஷ்ண நிலையைக கொடுககின்றது. புயற்காற்றுமின்றி மணற்காற்றுமின்றி இனிமை பொருந்திய தென்றற காற்றாக வீசி மக்கள் மனதைப் பரவசபபடுத்துகின்றது. இககாலத்தை (சூன்–செப்டெமபா) சாரற்காலம என்று அழைப்பது இப்பகக வழக்கு.

சாரல் என்பது தென்றலுடன் கூடிய தூறல் அல்லது நுண்துளி. "கூதல் மாரி நுண்டுளி தூங்குங் குற்றாலம" என்பது தேவாரம். நுணதுளியாகிய சாரல்மழை தனித்தும சில நேரம் வெயிலுடனும சில நேரம இளங்காறறுடனும இன்னுஞ் சிலநேரம இவ்விரண்டுடன் கலந்தும் பெய்யும. இமமலைபநதருங் காற்று உடல் வெப்பம மாற்றிக் குளிர்சசி கொடுககும. சாரல் மழை ஒவ்வொரு வருடமும தவறாமல் வைகாசியீ 15ல் ஆரமபமாகும இதை இடவப்பாதி மழையென்று கூறுவதுமுண்டு (இடவம ரிஷபமாதம்-வைகாசி) இமமழைக்கு முன்னறிகுறியாய் சித்திரைமாதமுதல் மேல் காற்று கிளமபிச சீறி அடிககும. இக்காற்றின் சீற்றத்தினளவே சாரல் மழையின மிகுதியும குறையும அமையும "சித்திரை பத்தில சிறநதபெருங்காற்று" என்று இவ்வூரில் ஒரு பழமொழி கூறுவாாகள்.

இக்காலத்தில் அருவியில் குளிப்பதால் மக்களுடல்நிலை நல்ல பயன் எய்தும். உடலைப்பற்றிய நோய், தோலைப்பற்றிய நோய், மூளையைப்பற்றிய நோய்களும் தீரும். பசியுண்டாகும். உடல் வலுக்கும். உற்சாகமளிக்கும். அருவியிலிருந்து பிராணவாயு (Oxygen) அம்சங்கள் அதிகமாய் அடங்கிய ஒருவித இளங்காற்று ஓசோன் (Ozone) வீசிக்கொண்டிருக்கும். இக்காற்று உடல் நலத்துக்கு மிக மிக அநுகூலமாயுள்ளது. கடற்கரைப் பட்டினங்களிலுள்ளவர்கள் இக்காற்றின் அருமையை நன்கறிவார்கள். அருவி நீர் வழியெல்லாம் காடுகளில் நிறைந்த மூலிகைகளைத் தழுவி வருவதால் அம்மூலிகைகளின் குணங்களும் நீரிற்கலந்து கிடைக்கின்றன. அருவி நீரின் வேகம் மின்சார அணுக்களைத் தோற்றுவிக்கின்றது. இத்துடன் காலையில் சூரியனுடைய ஊதா கதிர்கள் (Ultra violet rays) வீசுகின்றன. இவைகள் சேர்ந்து உடல் நலத்தை வளர்ப்பதற்கு ஏதுக்களாகின்றன.

இவ்வருவி சாரற்காலத்திலும் ஐப்பசி கார்த்திகை மழை காலத்திலும் அபரிமிதமாயும் மற்றக்காலங்களில் குறைந்தும் மிகக்குறைந்தும் விழுந்துகொண்டிருக்கும். சாரற்காலத்தில் மலை மேலும் தரை மட்டத்திலும் உள்ள சாலைகளில் உலாவித் திரிந்து அருவியில் நீராடி உணவு கொள்ள இனிமையாயிருக்கும். இது ஒரு தனித்த அனுபவம். உடல் நலத்துக்குச் சிறந்த அடிகோலி.

1811-ம் வருடத்தில் கிழக்கு இந்திய கம்பெனியார் நியமித்த மருத்துவக்கமிட்டி வடவருவியைப்பற்றித் தெரிவித்திருப்பதாவது: "இந்த விசித்திரமான இடத்தில் நோயாளிகள் குணமடைந்து உடல் நலம் பெறுவதற்கு முக்கிய காரணம் இங்கேயுள்ள சின்ன அருவியாகும். இந்த

அருவியில் ஐரோப்பியர்கள் அன்றாடகம் குளித்து வருகின் றனர். பாறையின் இயற்கை அமைப்பால் இந்த அருவி பிரிந்து பரந்து தலைக்குமேல் 13, 14 அடி உயரத்திலிருந்து தான் விழுகின்றது. பூரா அருவியும மலை உச்சியினின்று கீழேவரை ஒரே அருவியாய் விழுவதில்லை அருவிக்குள் நுழைந்ததும் முதன்முதல் திடுமென ஒரு நடுக்கல் உண்டா கிறது. இதன்பின் சொல்லமுடியாத ஒருவித இன்பம பிறக்கிறது. அருவியின் வேகம தேகத்தில் தாக்குவதால் இரத்த ஓட்டத்தைத் துரிதப்படுத்தி உடம்பு முழுவதும ஓர் பூரிப்பைக் கொடுக்கிறது தவிர சோம்பலைக கெடுத்து உற்சாகத்தைக் கொடுத்துப் பசியைக் கிளப்பி சீரணத்தைச சரிசெய்து பலவித நன்மைகள் உண்டாக்குகின்றது. நாங்கள் அறிந்த வரையில் வேறு எவ்வித நீராடலும இவ்வளவு அதிகமான நன்மை பயபபதில்லை. இநத நல்ல அருவியும் இன்புறத்தகக சீதோஷ்ணமும் சேர்ந்து இஙகு வருகின்ற வர்கள் இயமன்வாய்போகுந் கருவாயிலிருபபவாகளாயினும அவர்களுககுப் புத்துயிர கொடுதது மீட்டுகின்றன".

பாதிரியார் கால்ட்வெல் துரை தான் எழுதிய திருநெல் வேலி ஜில்லா வரலாற்றில் "இநத அருவி மிகக் கீர்த்தி வாய்ந்தது ஐரோபபியாகளும இநதுக்களும வெவ்வேறு காரணங்களினால் இதில் குளிகக ஆசைப்படுகின்றனர். குற்றாலம உலகததிலேயே மிகசசிறந்த நல்ல தண்ணீர் ஸ்நானகக்டடமெனறால மிகைபடக கூறுவதாகாது" என்று வரைநதிருககினறார். சுருககக வரலாறு எழுதிய ஸ்டுவர்ட் துரையும 'குற்றாலத்தருவி பாவங்களைப் போக்குவதென்று இநதுக்கள் அதைப் புகழ்கின்றனர். மனக்களிப்புடன் நீரா டத்தகுந்த இடமானதால் ஐரோபபியர் பெருமைப்படுத்து கின்றனர்" என்று குறிபபிடுகின்றார்.

திருக்குற்றாலம் பண்டைத் தமிழர்களால் ஒரு க்ஷேத்ர மாகவே கருதப்பட்டதென்றும ஆங்கிலேய அரசு தலை யெடுத்த பின்னர் ஐரோபபியர்களதான் முதன் முதலில் இவ்வூா ஓா அருமையான ஆரோக்கிய தலமென்று உணர்ந் தனர் என்றும முற்காலத்தில் ஐரோப்பியர்களும சிவில் அதி காரிகளும ராணுவ அதிகாரிகளும வீடுகள் கட்டி அடிக்கடி இங்கு வந்து நீண்ட நாட்கள் தங்குவது வழக்கமென்றும பிறகு அதிகாரிகள் அதிகமாக வருவதில்லையென்றும இந்திய மக்களே அநேக கட்டடங்கள் கட்ட ஆரமபித்துவிட்டனர் எனறும Mr H R. பேட் (ஐ. ஸி. எஸ்) தாம எழுதிய திருநெல்வேலி ஜில்லா சரித்திரததிற் கூறியிருக்கின்றார். ஐரோப்பியாகளே முதன் முதல் உடல்நலங் காரணமாக இங்கு வந்ததால் தங்கள் பெல்ஜிய நாட்டி லுள்ள ஸ்பா என் னும ஆரோககிய ஸ்தலம போன்று நீாவளம் நிரமபி உடல் நலம கொடுககும தலமென்று இவ்வூரை வியந்து தென்னாட்டு ஸ்பா எனற புனை பெயரிட்டனர். (famous SPA of the south) இயற்கை அழகைக்கண்டு மகிழ்ந்து அழகின் உறை விடம் (beauty spot) என்றும புகழ்ந்தனர்.

## வேறு பெருமைகள்

குற்றாலத்தின் பெருமை இயற்கை அழகுமட்டுமல்ல, தாவர நூல் கற்கின்றவாகளுக்கும் வேட்டையாடுகின்றவர் களுக்கும குற்றாலம ஏற்ற ஊா. பல்வகைத் தாவரங்களையும் விலங்குகளையும் காணலாம். 1835 ம் வருஷத்தில் டாக்டர் வைட் என்பவர் இந்த வட்டாரத்தைச சுற்றிப் பார்த்து ஆராய்சசி செய்ததில் 2000 விதமான பூச்செடிகளும் 2000 விதமான இதர பசசிலைச செடிகளும், மூலிகைகளும அகப் படுகின்றனவென்று கணக்கெடுத்திருக்கின்றார். மலையில்

மிளாவும் (sambhur), மலை ஆடும் (ibex) மலிந்து கிடக்கின்றன. புள்ளிமான்களையும் காணலாம். யானையும் புலியும் வருவதுண்டு. பன்றி, முள்ளம்பன்றி, காட்டுக்கோழிகளை எக்காலத்திலும் எல்லா இடத்திலும் பார்க்கலாம்.

1795-ம் வருடமுதல் கிழக்கிந்திய வியாபாரக் கூட்டத்தார் மொலுக்கஸ் தீவிலிருந்து சாதிக்காய், ஏலக்காய், கிராம்பு அதிமதுரம் முதலியன வருத்திப்பயிரிட்டனர். காப்பிச்செடியும் தேயிலையும் வளர்த்தனர். ஆயின் ஒன்றாவது இலாபம் கொடுக்கவில்லையாதலால் அத்தோட்டங்களை விலைக்கு விற்றுவிட்டார்கள். அருவிக்கரைத் தோட்டம், தெற்குமலைத் தோட்டம், உஞ்சக்கட்டி உதயம், சின்ன ராமக்கல், பெரிய ராமக்கல், குளிராட்டி முதலிய தோட்டங்கள் விலையாய் விட்டன. இங்கே ஆரஞ்சு, தென்னை, கமுகு, வாழை, பலா, கொய்யா, எலுமிச்சை, பம்புளிமாசு முதலியன விளைகின்றன. மாஜி சென்னை மாகாண மாஜிஸ்ட்ரேட் திரு. அப்பாஸ் அலியாருக்குச சொந்தமான தெற்குமலையில் சாதிக்காய் ஏலக்காய், கிராம்பு, மாங்குஸ்தான் முதலியன கிடைக்கும். இத்தோட்டத்தைப் பார்க்க அநேகர் செல்வதுண்டு. வழியெல்லாம் மலை வளங்களைக் கண்ணுற்று அனுபவிக்கலாம். ஹோப், மரிகா, வாசுதேவத்தோப்புகள் அரசாங்க ஆளுகையிலிருக்கின்றன

பொதுவாகக் கூறுமிடத்து திருக்குற்றாலத்திலுள்ள இயற்கையின் கவின்பெரு வனப்பும் கண்கொள்ளாக் காட்சியும் அறிவுடன் காண்பவன் ஒவ்வொருவனையும் கவிஞனாக ஆக்கிவிடும். உண்மைப்புலவன் இவ்வளம்படு வனப்பில் ஈடுபட்டு தன்னனுபவங்களை உயிர்ததும்புங் கவிகளாய்ப் பொழிவான். தவிர இக்காட்சி உயிர்களின் சிறுமையையும் நிலை

யாமையும் இறைவனின் பெருமையும் உண்மையும் உணர்த்திக்கொண்டே இருக்கும் உலகப் பற்றுக்களை யொழித்து மனத்தை ஒருவழிப்படுத்தி யோகசாதனை செய்வதற்கும் கல்வியறிவைப் பெருக்குவதற்கும் பொருத்தமான இடம் இதுவே.

இம்மலை வளங்களையும் வனப்புகளையும் அநுபவித்துப் புகழ்ந்து பதிகங்கள் பாட ஒரு திருஞானசம்பந்தர் வேண்டுமாயின் இதன் சால்புகள் எத்துணைப்பெற்றிவாய்ந்தது என்றியம்புதல் இயலாதன்றே!

இத்துணை நலன்கள் அமைந்த இவ்வூரில் சாரற்காலத்தில் சென்னை ராஜதானியின் பல பாகங்களினின்றும் பல துறையிலுள்ள பெருமக்கள் விரைந்து வந்து அருவியில் நீராடுவதாலும் சாரற்காற்றுடன் தென்றல் தங்கள்மேல் வீசுவதாலும் மனோகரமான இயற்கைக்காட்சிகளைக்கண்டு களிப்பதாலும் தங்கள் கவலைகளை மறந்து உடல் நலம் பெற்று மனநலம் பெருகி வாழ்கின்றது ஓர் வியப்பாமோ?

## ஜனத்தொகை

இந்த ஊர் சுமார் 3000 மக்கள் அடங்கிய ஓர் சிற்றூர் திருக்குற்றாலமுங் கிழக்கிந்தியக் கம்பெனியின் வியாபாரப் பிரதிநிதி காசாமேஜர் (Casamajor) துரை பேரால் உண்டானதுமான அதன் வடபாலுள்ள சிற்றூராகிய காசிமேசபுரமுஞ் சேர்ந்து அரசாங்கக்கணக்குகளில் குற்றாலக்கிராமம் என்று வழங்குகிறது. குற்றாலத்தில் மட்டும் ஜனத்தொகை மிகச்சொற்பம். சுமார் 40 வருடங்களுக்குமுன் நிலையாக இங்கு வசிக்கும் மக்கள் கிடையா. இப்போதுதான் சிலகாலமாக இவ்வூர் அருமையை அறிந்த சில பெரியார்களும்

உபகாரசம்பளம் பெருஞ் சில உத்தியோகஸ்தர்களும பலவித இல்லங்கள் கட்டி நிலையாகவும் தற்காலீகமாகவும் வாழ்ந்து வருகின்றார்கள்.

## தங்குதற்குறிய வசதிகள்

வெளியூரிலிருந்து வருகின்ற மக்கள் தங்குவதற்கு ஏற்ற இடங்கள் ஏராளமாய் இருக்கின்றன. கோயிலாரும் அநேக கட்டிடங்கள் கட்டி வாடகைக்குக் கொடுக்கின்றனர். திருவாவடுதுறை, தர்மபுரம், பெருங்குளம் முதலிய ஆதீனகாத்தர்களுடைய மடங்களும உண்டு. திருநெல்வேலி வயிரவன் பண்டாரம் கட்டிய திருநாவுக்கரசு மடத்திலும தங்கலாம். சொக்கன்பட்டி ஜமீன்தார்கள் சின்னணஞ்சத் தேவர் கட்டிய சத்திரமும எதிரே வலங்கைப்புலித்தேவர் கட்டிய வலங்கைப்புலி விலாச மண்டபமும், திருநெல்வேலி ஜில்லா போர்டு ஆட்சிக்குட்பட்டு ஜனங்களுக்குத் தங்குமிடம் அளிக்கப்படுகிறது. இப்பொழுது இவை டவுண்ஷிப் கமிட்டியின் ஆட்சிக்குள் வந்துவிட்டன. இதற்கு மேல்புரம் 16 அறைகள் கொண்ட கட்டடமுஞ் சற்று கிழக்கே ஆற்றை நோக்கி இருக்கும் பிரயாணிகள் விடுதியும தினசரி வாடகைக்குக் கிடைக்கும. இலஞ்சிக்குப்போகிற பாதையில் ஸ்ரீலஸ்ரீ மௌனானந்த சுவாமிகள் ஸ்தாபித்திருக்கின்ற தத்தாத்ரேய மடத்திலும சில பிரயாணிகள் தங்குவார்கள். இவை தவிர சேனையர் மடமும் வேறு பல மடங்களும் இருக்கின்றன. தோட்டமுஞ் சுற்றிடமும நிறைந்த வீடுகளும் தனிச சிறு கட்டிடங்களும் குடிக்கூலிக்கு அகப்படும. சாரற்காலத்தில் தங்குமிடங்கள் (lodging houses) சிலதிறக்கப்படும். ஆதியில் ஐரோப்பியர்கள்தான் வீடுகள் கட்டினர். "திருவாங்கூர் வீடு" (Travancore House) திருநெல்வேலி ஜில்லாவின் முதல் கலெக்டராகிய லூஷிங்டன் துரையாலும,

திருவாங்கூர் மகாராஜாவின் மாளிகை சென்ற நூற்றாண்டில் உதவிக் கலெக்டர் ஷேக்ஸ்பியர் துரையாலும், ஜகந்நாத ராயரின் பெரிய வீடும், கண்ணாடி வீடும், கி பி 1816-ல் முறையே கிழக்கு இந்திய கம்பெனியாரின் ஆட்களாகிய ஜான்சலிவன் துரையாலும ஹியூஸ் துரையாலும கட்டப் பட்டவை யென்று தெரிகிறது பிற்காலத்தில் ராமநாதபுரம், சிங்கமபட்டி, எட்டையாபுரம, சேத்தூர், தலைவன்கோட்டை, சிவகிரி முதலிய குறுநில மன்னருமபிறரும் அநேக வீடுகள் நவீன முறையில் அழகாக அமைத்திருக்கின்றனர். சுகா தாரம் பொருந்தி உண்ண நல்லுணவும் இருக்க நல்லிடமும் கிடைக்கும். அழகிய விடுதி ஒன்று புதிதாக அமைக்கப் பட்டிருக்கிறது கிறிஸ்துவ மிஷன் பங்களா ஓர் குன்றின் மேல் இருக்கின்றது.

## தல ஆட்சியும் வசதிகளும்

சில வருடங்களுக்குமுன் இவ்வூரில் நகரபரிபாலன சபை (பஞ்சாயத்து) நிறுவப்பட்டிருந்தது. இப்போது அதற்குப் பதிலாக எண்மர் அடங்கிய ஓர் டவுண்ஷிப் கமிட்டி குற்றாலம் டவுண்ஷிப் கமிட்டி சட்டப்படி சென்னை சர்க்காரால் நியமிக்கப்பட்டிருக்கிறது. தலைவர்: ஜில்லா கலெக்டர் உறுப்பினர்: ஜில்லா இன்ஜினீயர், ஜில்லா மருத்துவ ஆபீஸர், ஜில்லா சுகாதார ஆபீஸர், ஜில்லா காட்டிலாக்கா ஆபீஸர்: உத்தியோகப் பற்றற்ற மூவர்கள் ஜில்லா போர்டு தலைவர் திரு. K. ராமசுப்பு ரெட்டியார் பி. ஏ., பி. எல்., திரு. I. K. சுப்பிரமணிய பிள்ளை (மாஜி M. L. A.) திரு. ஆண்டபெருமாள் தேவர் (மாஜி பஞ்சாயத்து தலைவர்) ஆவர். பொதுமக்கள் நன்மைக்காக ஒரு ஒலிபரப்பி (Radio) யும், நல்ல புத்தகங்கள் அடங்கிய வாசகசாலையும் வைத்திருக்கிறார்கள். வீதிகளில் மின்சார

விளக்குகள் அமைக்கப்பட்டிருக்கின்றன மாலை நேரத்தை உல்லாசமாய்க்கழிக்க ஓர் பூங்காவும விளையாட்டு மைதானமும் அமைக்கப்பட்டிருக்கின்றன. மாசி ஜில்லா போர்டு தலைவர் திரு I C. ராஸ்வான் பிள்ளை நினைவுக்காக ஓர் பந்தடி மேடையும் அமைக்கப்பட்டிருக்கிறது டவுண்ஷிப் கமிட்டியார் ஓர் மருத்துவசாலை ஏற்படுத்தியிருக்கின்றனர். சிறிய தபால் நிலையம் உண்டு. சந்நதி வீதியில் உணவு கொள்வதற்கேற்ற நல்லவிடுதிகள் பல இருக்கின்றன. பலசரக்கு மளிகைகளுக்கும் மற்றக் கடைகளுக்குங் குறைவில்லை. கோயில் வாசகசாலையும் உண்டு. சில காலங்களில் சென்னை கவர்னா அவர்களும், சுதேச மன்னர்களிற் சிலரும் தங்கள் பரிவாரங்களுடன் வந்து தங்குவார்கள். அதிகாரவர்க்கத்தில் பெரியோாகளும் மற்றும பல துறைகளில் பெருமக்களும் ஏராளமாய் வருவது வழக்கம். சாரற்காலத்தில் இச்சிறிய ஊர் பெரிய நகரம் படுகின்றபாடுதான். சுதந்திர இந்தியாவில் சென்னை மாகாண முதற் கவானர் மே. தகு. ஸ்ரீ கிருஷ்ணக் குமார் ஸிங்ஜீ அவர்கள் (பவநகர் மகாராஜா) பின்பு கவர்னா மே. தகு ஸ்ரீ ஸ்ரீ பிரகாசா அவாகள், மைசூர் மஹாராஜா அவர்கள் இங்குவந்து வடவருவியில் நீராடி இககோயிலில வழிபாடு செய்தது குறிபபிடத்தக்கது. கவர்னா மே தகு. A. J. ஜான் அவர்களும் வந்து அருவியின் அழகிய காட்சியில் ஈடுபட்டனா

## தலப் பெருமை

எல்லாத் தலங்களிலும் வீற்றிருக்குஞ் சிவபெருமானுடைய அடிப்பாகம் பிரம பாகமென்றும, நடுப்பாகம் திருமால் பாகமென்றும, முடிப்பாகம உருத்திர பாகமென்றுஞ் சிவாகமங்கள் கூறுகின்றன. இதறகொப்ப இத்தலத்திலிருக்குஞ் சிவபெருமான் முதலாவது பிரமனாகவும் இரண்டாவது

விஷ்ணுவாகவும் மூன்றாவது சிவனாகவும் எழுந்தருளியிருப்பது ஓர் தனிச்சிறப்பு. திருவாரூர், காளத்தி, அண்ணாமலை தில்லை, மதுரை, காஞ்சி முதலிய பலதலத்துஞ் சிவபிரான் எழுந்தருளியிருத்தல்ஒவ்வொருவர்பொருட்டேயாம்,ஆனால் ஊழி காலந்தோறும் உலகங்களைப் படைத்துக் காத்து நிலையாக வீற்றிருந்து அரசுசெய்யுந தலம் இத்திருக்குற்றாலம். இக்கருத்துபற்றியே மாணிக்கவாசக சுவாமிகள் "குற்றாலத் திற்குறியாயிருந்து" என்று தமது திருவாசகத்தில் அருளிச் செய்தனர். இங்கே வேதமே குறுமபலாவாக முளைத்திருக்கின்றது. சிவபிரான் திருநடனமாடும் ஐந்து சபைகளில் ஒன்றாகிய சித்திரைசபையும் கருணை வடிவமான பராசக்தி பீடமும இங்குள்ளன, "எல்லாப்பொருளும் இதன்பாலுள. இதன் பாலில்லாத எப்பொருளுமில்லையால்" என்று திருவள்ளுவர் திருக்குறள் நூலின் பெருமையைத் தமிழ்நாகனார் என்ற புலவர் புகழ்ந்துரைத்தார். இதேபோல எல்லாத் தலமும் இதன்பாலுள. இதன் பாலில்லாத எத்தலமும் இல்லையால் என்று இத்தலப் பெருமையைக்கூறினால் அது முற்றிலுங் கண்கூடாகக் காணும் உண்மை, நினைத்தவருக்கு அருணையும், கண்டு வழிபடுபவருக்குத் தில்லையும், பிறந்தவர்களுக்குத் திருவாரூரும இறநதவாகளுக்குக் காசியும் கதி கொடுக்கும். இத்தலமோ மேற்கூறிய நால்வகையோருக்கும் கதி கொடுக்கும்.

திருக்குற்றாலம் வடமொழி தென்மொழிக் கடல்கள் குடித்த குறுமுனிவர் இங்கு திருமாலாயிருந்த கடவுளைச் சிவபெருமானாக்கி வழிபட்டதலம். "துளபக்குன்றைக்கொன்றைமுடிக்குன்றமாக்குந் தொன்னகரம" என்று திருவிளையாடற்புராணமியற்றிய பரஞ்சோதி முனிவர் உயர்த்தியிருக்கின்றார். ஆசிரியர் கச்சியப்பசிவாச்சாரியசுவாமிகள் இயற்றிய

கந்தபுராணத்தில் இத்தலப்பெருமையின் குறிப்புகள் கிடைக்கின்றன. சைவ சமய குரவர்களில் முதன்மையான திருஞானசம்பந்தர் இங்குள்ள இயற்கை வனப்புகளில் ஈடுபட்டுத் திளைத்து அவ்வளங்களில் மறைந்து திகழும் இறைவனைப் புகழ்ந்து திருப்பதிகம் பாடியருளினார். திருநாவுக்கரசர் தமது பாக்களில் வைப்புத் தலமாக போற்றியுள்ளார். வன்றொண்டராகிய சுந்தரமூர்த்தி நாயனார் கழறிற்றறிவாராகிய சேரமான் பெருமாள் நாயனாருடன் வந்து வழிபட்டிருக்கின்றனர். இந்த நிகழ்ச்சி திருத்தொண்டர் புராணந் தந்த சேக்கிழார் பெருமானால்

" .......... வன்றொண்டர் புகழ்ச் சேரருடன் புனிதா
மருவிய தானம் பலவும் பணிந்துபோய் மலைச்சாரற்
குருமணிகள் வெயிலெறிகுங் குற்றாலம் சென்றடைந்தார் "
" குற்றாலத் தினிதமர்ந்த கூத்தர்குரை கழல்வணங்கி
சொற்றரும மலர்புனைந்து குறும்பலாத் தொழுதிப்பான்
முற்றுவெண் மதிமுடியார் பதிபணிந்து . ... . "

எனச் சிறப்பிக்கப்பட்டிருக்கிறது. மாணிக்கவாசகர் " குற்றாலத் தெங்கூத்தா " என்று விளித்துப் பாடிப் பெருமைப்படுத்தியிருக்கிறார்.

இத்தலத்தின் தல விருக்ஷமாகிய குறும்பலாவிற்குத் தனியாக ஒரு திருப்பதிகம் திருஞானசம்பந்தரால் பாடப் பெற்றுள்ளது வேறு எத்தலத்திலுள்ள தலவிருக்ஷமும் இத்துணை பெருமை எய்தவில்லை. சைவ நன்மக்களிற் சிலர் இத்தலம் திருக்குற்றாலம், திருக்குறும்பலாவென இரண்டு தலங்கள் கொண்ட தனிப்பெற்றியுடையதெனக் கொள்கின்றார்கள். சிவபிரான் மாலாயிருந்த காலத்தில் ஈசான திக்கிலிருந்த கூத்தர் கோயிலை ஒரு தலமாகவும் சிவபிரான் வீற்

றிருக்கும் குறும்பலாவினடியை மற்ெருரு தலமாகவும் கொள்வது பண்டைச் சைவ மரபு. இம்மரபும் இத்தலத்தின் சிறப்பையே வலியுறுத்துகின்றது. கந்தபுராணத்துள்ள ஆறு சங்கிதைகளுக்குள்ளே சங்கர சங்கிதையிலும் சனற்குமார சங்கிதையிலும் திருக்குற்ருலத்தலமான்மியங் கூறப்பட்டிருக்கிறது, முழுமுதலிறைவன் உமாதேவியாரைத் திருமணஞ் செய்யும் பொருட்டு அம்மான்மியத்தை அகத்தியனுருக்கு அறிவுறுத்தினுரென்று தலபுராணங் கூறுகின்றது.

தற்காலத்தில் இககோயிலின் சீர்மை முன்னிலும் அதிகமாகப் பெருகி விளங்குகின்றது. இந்து சமயத்தில் ஒதுக்கி வைக்கப்பட்டதாகக் கருதப்பட்ட தாழ்ந்தவகுப்பினருக்கு இத்தலத்தில் கி. பி. 1938-ம் வருடத்தில் ஆலயப் பிரவேச உரிமை அளிக்கப்பட்டது,

இத்தலத்திலுறைகின்ற இறைவன் பெயர் **திருக்குற்ருலநாதர்**. திரிகூடமலை வாசியானதால் திரிகூடநாதரென்றழைப்பதும் வழக்கம். இறைவியின் பெயர் **குழல்வாய்மொழியம்மை**. குழலின் ஒலிபோன்று இனிமை பொருந்திய சொல்லையுடையவள் என்பது பொருள், ஒலி தத்துவத்தை உள்ளடக்கிய மேலாம் பரைப்பொருள் என்றும பொருள் கொள்ளலாம். திருக்குற்ருலமுடைய நாயனுர், திருக்குற்ருலமுடைய தமபிரானுர், திருககுற்ருலத்துப் பெருமானடிகள், திருககுற்ருலத்து ஆழ்வார் என்று இறைவனுக்கும், நாசசியார் குழல்வாய்மொழி, மங்கை கௌரி, குழல்வாய்மொழி மங்கையாரென்று இறைவிக்கும் பெயர்கள் வழங்கியதாக இக்கோயில் கல்வெட்டுகளிலிருந்து வெளியாகின்றது. திருக்குற்ருலத்தாணு—வேணுமொழிக் கவுரி, வேணு வாக் வாதினி என்றும் பெயர்கள் உண்டு,

இக்கோயில் சுதந்திரம் ஆசிரயம் என்ற வகைகளில் ஆசிரயத்தைச் சேர்ந்தது. ஆதலால் இறைவிக்கு இங்கே தனியே பெருவிழாக் கிடையாது.

## திருக்கோயில் அமைப்பு

இக்கோயில் பிற கோயில்களைப்போலச் சதுரவடிவமாக அல்லது நீண்ட சதுரமாக அமையாது சங்கவடிவமாக அமைந்திருப்பது ஒரு தனிப்பெருமை. ஏனெனில் அயன் வடிவங் கொண்டு எல்லா உலகத்தையுந் தோற்றுவித்த முழு முதல் இறைவன் இங்கே முன் யுகத்தில் திருமாலாயிருந்ததால் அவருடைய ஆயுதங்களுக்குள் சங்கம் கோயிலும் வீதியுமாயினது. ஆதலால் இக்கோயிலுக்குச் சங்கக்கோயிலென்றும், வீதிக்குச் சங்கவீதியென்றும் பெயருண்டாயிற்று. திருமாலின் சக்கரம் இக்கோயிலின் சிகரமாயினது. தலபுராணம் இவ்வாறிருக்கச் சங்க வீதியானது அகத்திய முனிவராலும் மலயத்துவச பாண்டியனாலும் நிர்மாணிக்கப் பட்டதென மற்றொரு வரலாறு கூறுகின்றது. சங்கு, சதுரம், ஆமை, தாமரை, வட்டம் இவ்வைந்து வடிவமுள்ள ஆலயங்களிற் சிறந்தது சங்கக்கோயில் என்று நூல்கள் கழறுகின்றதால் இக்கோயிலின் உயர்வு நன்றாய் விளங்கும். நான்கு வேதங்களும் நான்கு வாயில்களாயின. இறைவன் நடனங் காண பிலவேந்தன் வந்த வழி இக்கோயிலுக்கு ஐந்தாம் வாயில் ஆயிற்று. **இச்சங்கக் கோயில் வடக்கு வாயிலே முகமாக உடையது.** இத்தலத்தின் முக்கிய கடவுளாகிய கூத்தன் திருநடராஜப்பெருமான் இவ்வாயில் வழியாகவே விழாக்காலங்களில் திருவீதிகளில் திருவுலாக் கொள்ளப் போய் வருவது வழக்கம்.

இக்கோயிலின் கிழமேல் அளவு 376 அடி. தென்வடல் அளவு 407 அடி. இந்த அளவுகளுள்ள நிலப்பரப்பின்

மத்தியில் திருக்குற்றாலநாதர் கோயிலும், அவருக்கு வலப் பக்கம் குழல்வாய்மொழியம்மையார் கோயிலும், இடப்பக்கம் பராசக்தி கோயிலும் தனித்தனியாகக் காணப்படுகின்றன. இம்மூன்று கோயில்களுக்கும் பொதுவான ஒரு உட்பிரகாரம் உண்டு. இதற்குச் சங்கவீதி என்று பெயர்.

## கோயில் மண்டபங்கள்

கோயில் கீழ வாயிலிலிருந்து உள்ளே செல்ல முதலாவது திரிகூட மண்டபந் தோன்றும். இம்மண்டபத்தில் விழாக்காலங்களில் இறைவன் இறைவி முதலியோருக்கு அபிஷேக அலங்காரங்கள் செய்யப்பட்டு வழிபாடு நடக்கும். மார்கழித்திருவாதிரையன்று நடராஜப்பெருமானுக்கு இங்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெறும். இம்மண்டபங் கடந்தபின் வெளிச்சந்நிதியில் துவாரவிநாயகராகிய அம்பலவிநாயகரும், துவாரசுப்பிரமணியராகிய பால ஷண்முகருங் காட்சியளிப்பர். தென்பக்கம் கீழவாயிலில் ஐயனார் இருப்பார். இவ்வாயில் தாண்டி உட்சென்றதும் நமஸ்கார மண்டபம், பலிபீடம், பொற்கவசமிட்ட கொடிமரந் தோன்றும். இன்னுங் கோயிலினுட்புக வழியில் வலப்புறம் நின்ற கோலத்தில் ஒருவிநாயகரும் இடப்புறம் சுப்பிரமணியருந் தென்படுவர். துவாரபாலகர்களும் நிற்கின்றனர்.

## இறைவன் கோயில்

உள்ளே செல்ல உட்பிரகாரத்தின் கீழ்பக்கம் அதிகார நந்தி வடக்குமுகமாக நிற்பர். அடுத்தபடியாகப் பரிதியங் கடவுள் (சூரியன்) தோன்றுவார் தெற்குப் பிரகாரத்தில் கல்லாலின்கீழ் தெற்கு முகமாயிருப்பர் தெட்சணாமூர்த்தி. எதிரில் அபிராமி, மகேஸ்வரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி முதலிய ஏழு கன்னியருஞ்

சுரதேவரும் வீற்றிருப்பார்கள். கன்னி மூலையில் விநாயகர் இருப்பர். அடுத்து சோமாஸ்கந்தர், குழல்வாய்மொழித்தாய், விநாயகர், வள்ளி தெய்வானையுடன் முருகக்கடவுள், சண்டேசுரர் முதலிய ஐவரும ஒரே இடத்தில் உற்சவ முகூர்த்தமாகக் காட்சியளிப்பர். இதுவும் இத்தலத்தின் ஒரு மகிமை. பக்கத்தில் கலைமதியைக் காணலாம. தொடர்ந்து பஞ்சபூத தலக்கடவுள்களாகிய வன்மீகநாதர், (பிருதவி—காஞ்சி) ஜமபுகேஸ்வரர் (அப்பு திருவானைக்கா) அண்ணாமலைநாதர் (தேயு), காளத்தியப்பர் (வாயு), திருமூலநாதரும (ஆகாயம்-தில்லை), இவர்களுக்கு வடபுரம் திருமலையப்பருந் தோன்றுவார்கள். கர்ப்பக்கிரகம் மேலச் சுவர் மத்தியில் மேற்குமுகமாக திருமால் வீற்றிருப்பார். வாயு மூலையில் வள்ளி தெய்வயானையுடன் முருகக்கடவுளும், கீழ்பக்கம் தெற்கு நோக்கிச் சனிபகவானும் வருவார்கள். எதிரேயுள்ள கோமுகவாயிலில் பிரமன் இருப்பார். சண்டேசுரர் ஒரு சிறு தனிக்கோயிலில் தவஞ்செய்துகொண்டிருப்பார்.

மீண்டும் கீழப்பிரகாரம் வந்து ஆட்கொண்டார் குறடு கடந்து கோயிலுள்ளே செல்ல மகா மண்டபத்தில் கிழக்கு நோக்கி சந்திரசேகரரும விநாயகரும் வீற்றிருப்பார். தெற்கு நோக்கி நடராஜப்பெருமான் ஆனந்தநடனஞ் செய்துகொண்டிருப்பார். பக்கத்தில் மாணிக்கவாசகரும் காரைக்காலம்மையாரும் தொழுது கொண்டிருப்பர். வலப்பக்கம் அன்னபூரணி அதிகாரநந்தி, அகத்தியர், தில்லைவாழந்தணர், சம்பந்தர், அப்பர், சுந்தரமூர்த்தி, சேரமான் பெருமாள், நித்ய உத்ஸவர் என்ற சீவிலி நாயகர் அஸ்திரதேவர் வீற்றிருப்பர். 12 திருமுறைகளடங்கிய திருமுறைக்கோயிலும் இங்கேயுள்ளது. இடப்பக்கம மற்றொரு நடராஜர் பிக்ஷாடனர் காட்சியளிப்பர். மூலஸ்தானத்தில் ஓருகத்தில் அயனுகி

ஓருகத்தில் அரியாகிப் பேருகத்தில் அரனாக வீற்றிருக்கும் தேவதேவன் திருக்குற்றாலக்கூத்தன் திரிகூடநாதன் திருக்கோயில் கொண்டருளியிருக்கின்றான். இவனுக்கு ஈசான திக்கில் சக்தியாகிய மனோன்மணி தெற்குமுகமாய் வீற்றிருக்கின்றாள். (மனோன்மணி ஒரு செம்பு விக்கிரகம்)

## அம்மையார் கோயில்

இப்பெருமானைத் தரிசித்தபின் வெளியே வந்து மணிமண்டபங் கடந்து கொடிமரத்தைச் சுற்றித் தெற்கேபோக அம்மையார் கோயில் தோன்றும். அம்மையாரும் உயரமான கர்ப்பக்கிரகத்தில் எழுந்தருளி நின்று காட்சியளிக்கின்றாள். உட்பிரகாரம கன்னிமூலையில் ஒரு சிவலிங்கமும் வாயுமூலையில் மகிஷாசுரனை வதைத்த மாகாளி (துர்க்கை) யும் வீற்றிருக்கின்றனர். முன்மண்டப மத்தியில் இறைவன் இறைவி பள்ளிகொள்ளும் மாடம் இருக்கின்றது. எதிரில் ஒரு பெரிய நிலைக்கண்ணாடி வைக்கப்பட்டிருக்கிறது. பள்ளியறை ஆராதனை காலத்தில் இக்கண்ணாடியுள்ளும அவ்வாராதனையைக் கண்டு களிக்கலாம,

## சங்க வீதி

இறைவி கோயில் முன் மண்டபத்திலுள்ள தெற்கு வாயில் வழியே இறங்கியவுடன் தலவிருக்ஷமான குறும்பலா மரத்தடியில் திருக் குறும்பலாநாதர் தோன்றியருளுவர். தெற்குப்பிரகாரத்தில் திருத்தொண்டர்களான அறுபான் மூன்று நாயன்மார், தொகையடியார் ஒன்பது, மாணிக்க வாசகர் அணிவகுத்து நிற்பர். இவர்களுக்குப் பின்பக்கம் மேற்குநோக்கிச்சிவசைலநாதரும் கிழக்குநோக்கிப் **பத்துத் திருக்கரங்கள் கொண்ட** வல்லப கணபதியும கோயில் கள் கொண்டிருக்கின்றனர். கோயில் தெற்கு வாயிற்பக்கம்

னன்னகரப் பெருமாளாகிய விஷ்ணுமூர்த்தி அமர்ந்திருக்கின்ருர். அடுத்து உலகம்மன் பாவநாசருடனும் நாகேஸ்வரியமமையுடன் சுவாமிநாதரும் காந்திமதியமமையுடன் நெல்லையப்பரும் வருகின்றனர். இவர்களுக்கு வடபால் இறைவன் குறுமுனிகரு மணக்கோலங் காட்டிய அருங்காட்சி கிடைக்கின்றது. இசசிறு கோயிலில் இறைவன் இறைவியின் கை பிடித்து நிற்க நான்முகன் சடஙகியற்ற திருமால் நீர்வார்க்க இலக்குமி வரிசை செய்ய அகத்தியர் முதலிய முனிவர்கள் காண உலகமககள் உய்ய குற்ருலநாதா திருமணங் கொள்கின்ருர். இதற்குப் பின்பககம இறைவனுககு அபிடேகத் தைலம தயாரிக்கும் அறை இருந்தது. இந்த அறை எடுபட்டதால் இப்போது தைலப்பிறை திரிகூட மண்டபத்தின் பக்கம இருககிறது. இநத மகாசந்தனுதித் தைலம அநேக மூலிகைகள், வேர்கள், மருந்துச சரக்குகள் சேர்த்து மருத்துவ முறைப்படி பக்குவமாகக் காய்ச்சப்படுகிறது. தலைவலி, வயிற்றுவலி, க்ஷயம, இளைப்பு முதலிய கொடு நோய்களை நீகக ஒப்பற்ற மருநது. அபிடேகமான தைலத்தை இன்றைக்கும அநேக மககள் விலைக்கு வாங்கி உள்ளே உணடும மேலே தடவியும சீரா நோய் நீஙப பெறுகின்றனர். அபிடேகத் தைலம பட்டினம் படி விலை ரூ. 22—8—0.

தொடர்ந்து, நாறும்பூநாதா. சங்கரலிங்கர்—கோமதியமபாள், பால்வண்ணநாதர், ஒப்பனையமமை, சொக்கலிங்கம் மீனுக்ஷி, மேற்றிசை காவற்கடவுளாகிய கணநாதர், எதிரால் பஞ்சதரிசனமாகிய சோமலிங்கம. விநாயகர், சிகரம, மலை, அருவி முதலியன கண்ணுறலாம். இது கடந்து மதுநாதேஸ்வரர்—அறம்வளர்த்தநாயகி, குறுமுனி, வாசுகியையும் பார்க்கலாம், வடக்குப் பிரகாரத்தில் தென்பக்கம் சகஸ்ரலிங்கமும

மகாலிங்கமுஞ் சற்று கிழக்குதள்ளி வடபக்கம் காசிவிசுவநாதர் விசாலாக்ஷியம்மையும வடக்கு வாசல் ஐயனாரையும் தரிசிக்கலாம்; மேற்கு முகமாக அகத்திய முனிவரை நோக்கி ஓர் கோயில் இருக்கின்றது. இதிலுள்ள விக்கிரகத்தைச் சிலர், திருமூலர் என்றும சிலர் நாடோறும மூவா தேவார முழுமையும் முறைப்படி ஓத விழைந்து முற்றுப் பெருமையினால் இறைவன ஆணைப்படி அகத்தியனார் தொகுத்த தேவாரத் திரட்டை ஓதி வீடெய்திய சிவாலய முனிவர் என்றுஞ் சொல்கின்றனர். கீழப்பிரகாரம ஈசானத்தில் வயிரவர் இருக்கின்றார். பக்கத்தில் யாகசாலை மண்டபந் தோன்றுகிறது. சற்று மேற்கே தள்ளிப் பராசகதிகோயில் விளங்குகின்றது. எதிராகச சபாபதி மண்டபம் அழகாக அமைந்து கிடக்கின்றது.

பராசகதி பீடத்துக்கும் இறைவன் கோயிலுக்கும் நடுவே ஒரு விசாலமான மண்டபம் இப்போது வெஞ்சன அறையாய் உபயோகப்படுத்தப்படுகிறது. இம மண்டபந் தாண்டி நவக்கோள்களையும் வழிபட்டுக் கோயிலுக்கு வசந்த வீதி சுற்றிவரலாம.

## வசந்த வீதியும் சுற்றுக் கோயில்களும்

கோயிலுக்கு எதிராகவுள்ள ஆற்றங்கரையில் சிறு கோபுரங்கள் உள்ள இரண்டு குறிஞ்சி மண்டபங்களும மத்தியில் ஒரு படித்துறையும் உண்டு. தெற்குவீதியில் அரசமரத்தடியில் **செண்பக விநாயகரும்** அடுத்து வைத்தியப்ப விலாச மண்டபமும படித்துறையும வருகின்றன. இம்மண்டபத்தில் இப்போது கோயில் படிப்பகம் ஸ்தாபிக்கப்பட்டிருககிறது. கோயில் தெற்கு வாயில் முன் ஒரு பலாமரத்தடியில் ஓர் ஐயனாரும் சற்று மேறகே ஓர்

கணபதி சக்தியுடனும் தோன்றுவார்கள். இங்கே அருவிப் பாதை பிரிகிறது. மேற்கு வீதி, மலையின் அடியில் இருக்கிறது. கன்னியில் பிள்ளையன் கட்டளை மண்டபமும் ஒரு சிறு விநாயகர் கோயிலுமுண்டு. இவ்வீதியில் நின்று மலையை நோக்கக் கண்களுககு ஒரு நல்ல விருந்தாகும். வடக்கு வீதியில் வடககு வாயிலுககு முன் பதினெண் ஸ்மிருதிகளும் பதினெட்டுப் படிகளாக அமைந்து கிடக்கின்றன. இதற்கு மேல் குற்றாலக கறுப்பன் தெற்கு நோக்கிக் கனதுடியாய் நின்று காவல் புரிவான். இவனைப் **பதினெட்டாம்படிக் கறுப்பன்** என்றுஞ் சொல்வதுண்டு. வடக்கு வாயில் மண்டபத்துள் காவல் புரியுஞ் சிறு தேவதைகளைக் காணலாம். சிறிது கிழக்கு ஏக ாசான மூலையில் காவற் தேவதையாகிய சின்னத்தம்பி தோன்றுவார்.

குற்றாலநாதர் கோயிலுக்குத் திருச்செந்தூர், மதுரை முதலிய ஸ்தலங்களில் உள்ளவை போல ஒரு பெரிய கோபுரம் அமைக்கவேண்டுமென்று அநேக ஆண்டுகளுக்கு முன் அடிகோலப்பட்டும யாது காரணத்தாலோ அம்முயற்சி முற்றுப்பெறவில்லை. கோயிலின் கீழவாயிலிலும் மூலஸ்தானங்களுக்கு மேலும் சிறு கோபுரங்கள் உண்டு இறைவன் முன்னிலையில் ஒரு கொடிமரம் நிற்கின்றது.

## சார்புக் கோயில்கள்

**செண்பகதேவி.** இவள் செண்பக வனத்தைக் காக்கும தேவதை. அடியிலிருந்து மலைமேல் 2 மைலுக்குள் நல்ல பாதையுள்ள செண்பக அடவியில் கோயில் கொண்டருளியிருககிறுள். வசீகரமான தோற்றமுடையவள். குற்றாலநாதரின் பெருவிழாக்கள் விக்கினமின்றி நடைபெற முதன் முதல் இத்தேவிக்கு ஆராதனை நடத்திய பின்பே அவ்

விழாக்கள் ஆரம்பிக்கப்படும். இங்குள்ள அருவிப்பக்கத்தில் ஒரு குகையும் ஒரு மண்டபமும் உண்டு. இம்மண்டபம் மக்கள் சமையல் செய்து உணவு கொண்டு உல்லாசமாய்க் காலத்தைப் போக்குதற்குத்தகுந்த இடம். இத்தேவிக்கும் சித்திரை மாதம் பத்துநாள் விழா நடந்து பௌர்ணமியன்று விசேட வழிபாட்டுடன் முடிவுறும். இந்த நாளிரவு இத் தலத்தில் மஞ்சள் மழை பெய்யுமென்று தலபுராணங் கூறுகின்றது. (ப. 307. பா. 37) இக்கோயிலுக்கு மேலேயுள்ள சிவமதுகங்கை யென்ற தேனருவியில் இந்நாளன்று கங்கா தேவி சிவலிங்கத்தைத் தேனால் வழிபடுவதால் மஞ்சள் நிறமுள்ள தேன்துளிகள் மஞ்சள் மழையாய் பெய்கிற தென்று மக்கள் நம்புகின்றார்கள். இத்தலத்துக்கு மேலே பரதேசிப்புடை யென்ற அழகிய குகை ஒன்றிருக்கிறது. 30 அடி நீளமிருக்கும். ஒரு பெரும் பாறை குடைபோலப் பரந்து விரிந்து உள்ளே வெயிலும் மழையும் படாமல் மறைக்கும். இங்கு முன் ஒரு பரதேசி இருந்ததால் பரதேசிப் புடையெனப் பெயர் பெற்றது. இவர் வரலாறு தெரியவில்லை. ஒரு சித்தர் என்பது மட்டும் வெளியாகிறது. ஒரு கல்லில் சில எழுத்துக்கள் தெரிகின்றன. இதை பாலி பாஷை எழுத்தென்று கருதுகிறார்கள். இதனால் சிலர் இக் குகை புத்தசன்யாசிகள் இருந்த இடம் என்று அபிப்பிராயப் படுகின்றனர்.

**சித்திர சபை.** ஐந்தருவி ரோட்டில் உள்ளது. இஃது இறைவன் திருநடனமாடும் ஐந்து சபைகளில் ஒன்று. திருவாலங்காட்டிலுள்ள ரத்னசபை, தில்லையிலுள்ள கனக சபை, திருவாலவாயிலுள்ள வெள்ளி சபை, திருநெல்வேலியில் உள்ள தாமிரசபை முதலியவற்றைவிட இங்குள்ள சித்திரசபை மிகவும் பெருமையுடையது. மற்றச்சபைகளில்

விக்கிரகமாகக் காட்சியளிக்கும் திருநடராஜர் இங்கு ஓவிய உருவமாயுங் காட்சியளிக்கிறார். பலவகைத் தாண்டவங் களில் ஒன்றாகிய திரிபுர தாண்டவம் இங்கே நடைபெறுகிற தென்று திருப்புத்தூர்ப் புராணம் கூறுகின்றது. சபைககு முன்னர் தெப்பக்குளமும மத்தியில் உயர்ந்த கோபுரமுள்ள நீராழி மண்டபமும பாங்குடன் விளங்கும, சபையில் நடராஜப்பெருமான் தேவியாருடன் எழுந்தருளியிருக்கின் றார். மார்கழி மாதத்தில் திருவாதிரை விழா விமரிசையாக நடக்கும். அன்று இங்கு ஆராதனை நடந்த பின்பே திரிகூட மண்டபத்தில் எழுந்தருளியிருக்கும நடராஜமூர்த்திக்கு ஆராதனை நடைபெறும. சபையில் இறைவன திருநடனம புரியும் காட்சியைக் கண்டு பிரமதேவன ஆதிசகதி சிவபிரா னுடைய சொரூபங்களைச சுவரில் எழுதிவைத்தான். வியாசா முதலியோர் இதனால் இதைச் சித்திரசபை என்று அழைத்தனர். காசிகண்ட பராக்கிரமபாண்டியன் ஆதியில் இச்சபையைக் கட்ட ஆரமபித்தான். சபையின்கீழ்மண்டபம தென்கிழக்கு மூலையில் ஒரு அளவுகோல் சபையிலிருந்து வெளியில் எடுகக முடியாதபடி அமைக்கப்பட்டிருககிறது. 1957 ம வருடத்தில் பிரகாரத்தில் கல் தளவரிசை செப்ப னிடப்பட்டுச செப்போடும் பழுதுபார்க்கப்பட்டன. சபைக் குரிய இரு திருப்பாக்கள் சலவைக்கற்களில் எழுதிச சுவரில் பதிக்கப்பட்டிருக்கின்றன. சித்திரசபை முன் வாசல் மேல் சுதையால் வல்லப விநாயகர் சமயகுரவர் சநதிரசேகரர் (தேவியுடன்) பாலஷண்முகர் அலங்கரிக்கின்றனர். தெற்கு வாயில் மேல் நடராஜர் சிவகாமியமமை மணிவாசகர் காரைக்காலம்மையார் பாங்காய் விளங்குகினறனர். நடராஜப் பெருமான் வடக்கேயுள்ள திருவாலங்காட்டை விட்டு தெற்கே குற்றாலத்தை நோக்கி வந்தது இங்குவீசும்

தென்றற்காற்றில் இளைப்பாறவும் தீர்த்தமிழை அநுபவிக்கவுமென்று பரஞ்சோதியார் கூறுகின்றார்.

குற்றால நங்கை திருவாங்கூர் திவான் தங்கும் வீடாயிருந்தது தற்காலம் பிரயாணிகள் விடுதியாக விளங்கும் இடத்தின் (rest-house) நான்கு எல்லைக்குள் இருக்கின்றது. கோயில் வட எல்லை காக்குந்தேவதை.

கூத்தர் கோயில் ஐந்தருவி ரோடும் இலஞ்சி ரோடும் சந்திக்கிற இடத்தில் உள்ளது. திருக்கூத்தர் கிழக்கு நோக்கியும், குழல்வாய்மொழி அம்மையார் தெற்கு நோக்கியும் உருவச் செறிவுடன் சிறிய கோயில்களில் எழுந்தருளியிருக்கின்றனர். 1957-ம் வருடத்தில் இக்கோயிற் பிரகாரம் முழுமையும் கல் தளவரிசை யழகாய் அமைக்கப்பட்டும் மதில் சுவர்கள் சிலமாயிருந்ததால் கல்லினால் புதிதாய்க் கட்டப்பட்டும் கோயில் மேல் சிகரம் வைத்தும் சுதையால் சந்திரசேகரரும் தேவியும் விநாயகரும் சுப்பிரமணியரும் அமைத்துப் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றது.

அடியொட்டும் பாறைப் பன்றிமாடசாமி. சித்திராநதியின் கீழ் கரையில் திருவாவடுதுறை மடத்துக்கு முன்னர் உள்ளது. நவாபுகள் ஆட்சிக்காலத்தில் ஒரு பட்டாணி குதிரை யேறிக்கொண்டு ஆலயத்துக்குச் சிறிது தூரத்தில் இங்குவர அர்ச்சகர்கள் தடைசெய்யவுங் கேளாமல் மீட்டுங் குதிரையைச் செலுத்த அக்குதிரை அடியெடுத்து வைக்கமாட்டாமல் ஒட்டிக்கொண்டு நின்றதால் அடியொட்டும் பாறையெனப் பெயர்பெற்றது.

ஆவரணப் பிள்ளையார். இதற்குக் கீழ்புறமுள்ளது. ஆன்மாக்கள் சுத்தமடையும்போது இன்பந்தரும

புண்ணியத்திலாவது துன்பந்தரும் பாவத்திலாவது மனதைசசெல்ல விட்டாது சிவஞானத்தில் செலுத்தும்படி உலகப்பற்றையும் நன்மை தீமை என்ற கர்ம பேதத்தையும் மறைப்பது ஆவர்ண சக்தி.

**சம்பந்த விநாயகர்.** அம்பாசமுத்திரம் கற்பாதை பிரிகிற இடத்தில் உள்ளது. திருஞானசம்பந்தர் இத்தலத்துக்கு வந்த ஞான்று, எங்குஞ் சிவலிங்கங்களாயிருப்பதைக் கண்டு சிவிகையிற் செல்ல அஞ்சி இந்த இடத்தில் இறங்கி நடந்து சென்று திருக்குற்றாலத்திறைவனை வழிபட்டுப் பதிகம் அருளிச் செய்தனரென்றும் இதனால் இவ்விநாயகர் சம்பந்த விநாயகர் என்றும் பெயர்பெற்றதாகவும் ஓர் பரம்பரை வழக்கு உலவுகின்றது. 1957-ம் வருடம் இக்கோயில் மதிற்சுவர்கள் செப்பனிடப்பட்டு உள்ளே தளவரிசையும் அமைக்கப்பட்டிருக்கிறது. கோபுரமும் புதுபிக்கப்பட்டிருக்கிறது. சன்னதியின் மேல் திருஞானசம்பந்தர், நின்றசீர் நெடுமாறர், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் முதலியவர்களையும் சம்பந்தருடைய சிவிகையையுங் காணலாம்.

**நன்னகரம் பிள்ளையாரும் பன்றிமாடசாமியும்.** தென்காசியிலிருந்து குற்றாலத்துக்கு வருகிற வழியிலுள்ள நன்னகரம் என்ற ஊரில் கற்பாதையடியிலுள்ளன.

**திட்டைப் பிள்ளையார்.** தென்காசி – குற்றாலம் பாதையில் வாழவல்லான்குடிக் காலின் தென்கரையில் ஒரு மேட்டிலுள்ளவர். (திட்டை–மேடு)

**பாசுபத சாஸ்தா.** குற்றாலத்தின் கீழ்பக்கம் எட்டையபுரம் பங்களாவின் தென்பக்கத்திலுள்ள காவற் கடவுள்.

*பாட்டப்பற்று சாஸ்தா.* குற்ருலக்கோயிலின் நன்செய் நிலங்களிருக்கும பாட்டப்பற்றுப் புரவிலிருக்கிற காவற் கடவுள்.

## இத்தலத்தின் வேறு பெயர்கள்

இத்தலம் வேறு 21 பெயர்களாலும் வழங்கப்படுகிறது. அவையாவன: தருமசாமி யென்னும வேதியன் வேசியர் வலையிற் சிக்குண்டு செல்வமிழந்து ஒரு நாள் தாகவேட்கையால் காமக்கிழத்தியரிடம் நீர கேட்க அவள் மதுவைக் கொடுக்க இவன் அதைஉண்டு தன் குலநெறியைக்கெடுத்துப் பாவம் வளர்த்து உடல் தேய்ந்து வருநாளில் முன் வினைப் பயனால் நாரதமுனிவரின் அறவுரை கேட்டு வடவருவியிற் குளித்துப் பாவம் போக்கி உயிர் மீட்டியதால் **மது உண்டான் உயிர்மீட்டபுரம்** எனப் பெயர் வந்தது.

கவுற்சனனென்னும்வேதியன்பாவமெல்லாம் ஒன்ருய்த் திரண்ட உருவாகித் தீத்தொழிலே செய்து இறந்து நரகஞ் சென்று துன்பத்தில் இடர்ப்பட அவன் மகன் சுகுற்சன் தன் தந்தையின் தீச்செயல்களைக்கேட்டு வருந்தி அப்பாவங் களைத் தொலைக்க வழிதேடி நாரதமுனிவரைக்கண்டு அவர் கூறியபடி வடவருவியில், மாசி மாதம் துவாதசியில் மூழ்கிய பயனைத் தந்தைக்குக்கொடுத்த பலனால் தந்தையும் நரகத்தினின்று விடுபட்டுத் திருகூடநாதரை வணங்கி கற்பக நாட்டையடைந்ததால் **பிதுர்கண்டந்தீர்த்தபுரம்** எனப் பட்டது.

கண்டகசேதனன் என்ற வைசியன் பொருள் வேட்கையால் வாணிபத்தில் ஈடுபட்டுத் திருக்குற்ருலம் வந்து தான் கொண்டுவந்த பண்டங்களைக் கொடிய விலைக்கு விற்று ஊர்

திரும்பிப் பணங்காத்த பேய்போலிருந்து அறமொன்றுஞ் செய்யாதிறக்க, யமதூதர்கள் இவனை நரகத்தில் இட்டுத் துன்புறுத்த யமதர்மராஜன் இவன் குற்றலத்தில் சிலகாலம் தங்கியதால் பாவமெல்லாம் புண்ணியமாயிற்றென்று நினைத்து விடுவிக்கக் கண்டகசேதனன் நரகத்தினின்றும் கயிலாசம் சென்றமையால் **பவர்க்கமீட்டபுரம்** எனக் கூறப்பட்டது.

முதுவேனிற்காலத்தில் பசியையுந் தண்ணீருங் கிடையாமல் தத்தளித்த ஒரு வேழம் செண்பகசோலையில் வந்து கனிகளையும் வடவருவியில் தண்ணீரையும் உண்டு துதிக்கையினால் நீரையள்ளித் தன் உடலிற் சொரிய அந்நீர் பெருக்கெடுத்துச சோலையில் யானை உதிர்த்த தளிர், தழை, மலர், கனி யெலாம் குறும்பலா ஈசர் பக்கஞ் சேர்ந்தது. இவ்வாறு வேழம் தன் செய்கையின் பலன் அறியாமல் பூசித்தாலும் இறைவன் அதையும் ஏற்று அதற்குக் கெஜகாணனெனும் பெயர் கொடுத்துக் கயிலாயத்தில் வாயிற் காப்பாளுக அமர்த்தினர். இதனால் **வேழம்பூசித்தபுரம்** என்றாயிற்று.

வலனென்னும் வேடன் வேட்டையாடுமிடத்தில் பாம்பினால் பிணிக்கப்பட்ட ஒரு யானையை விடுவிக்கவும், யானை நன்றி மறந்து வேடனை எதிர்க்க இவனும் எதிர்த்த வேளையில் பசியிருந்த ஒரு முயலைச்கொன்று வேகவைப்பதற்காக மரக்கொமபில் அக்கினி கடைய, ஒரு நரி மாமிசத்தைத் திருடி ஓடிவிட்டது. இவன் இந்த நரியை விரட்ட நரியுஞ் சங்கவீதி வலஞ்சுற்றி ஓட, இவனும் நரியைப்பிடிக்க பின்னே ஓடினன். இவ்வாறு வேடனும நரியும் வலஞ்சுற்றியதால் வேடன் சிவகணத்துள் ஒருவனுயும, நரி கிங்கரனுயும் பதவிகள் எய்தினர். **வேடன் வலஞ்செய்தபுரம்** எனும் பெயர் இக்காரணம்பற்றி வந்தது.

கொடிய வறுமையால் உணவும் உடையுமின்றி இரப்பதே தொழிலாக, புல்லாற்றிரித்த கயிறை அரைஞாணாகக்கட்டி வாழ்ந்த பிராமணன் ஒருவன் ஒருநாள் குளிர் தாங்க வலிமை இல்லாது கலங்கி ஒரு சிவன்கோயிலடைந்து இறைவனணிந்திருந்த பரிவட்டத்தைத் திருடிப்போர்த்துச் சிவத்துரோகமடைந்தான். திரிகூடமலையிலுள்ள நதியில் அவன் மூழ்க அத்துரோகம் அவனை விட்டு நீங்கியது. தவிர தக்கன் வேள்வியின்கண்ணே குழுமியிருந்த தேவர்கள் ஆணவத்தால் சிவபிரானை இகழச் சிவத்துரோகம் வந்தடைந்தது. இதனால் தேவர்கள் பல இன்னல்களுற்றுப் பொறுக்க மாட்டாது இறுதியில் பிரமதேவன சொற்படி செண்பக வனஞ்சென்று கடுந்தவம்புரிந்து இறைவனருளால் துரோகம் நீங்கப்பெற்றனர். இக்காரணங்களால் **சிவத்துரோகந் தீர்த்தபுரம்** என்றாயிற்று

ஆத்திரேயனென்பான் காமக்கடலிலேமூழ்கியும், பொய் பேசியும், பொன் திருடியும, வஞ்சகம பயின்றும், கட்குடித்தும், கொலைகள் செய்தும உடல் மெலிந்து நலிந்து இங்கு வரவும், இத்தலத்திலுள்ள மந்த மாருதமாகிய தென்றற் காற்று அவன்மேல் வீச உடல் நலமபெற்று அறிவுதெளிந்து நற்குணமடைந்து நற்றொழில் செய்து நற்கதி பெற்றான். தென்றலாகிய வசந்தம் இநத நற்பயனளித்ததால் இத்தலம் **வசந்தப் பேரூர்** என்றழைக்கப்படுகிறது.

கங்கை இங்குவந்து சிவனை மதுவினால் தேன் அபிடேகித்து வழிபட்டதால் **கங்கைவந்தபுர** மென்றும், செண்பகப் பூஞ்சோலை சூழ்ந்திருப்பதால் **செண்பகாரணியபுர** மென்றும், திருக்கோயில்முன் ஆறு ஓடுவதால் **நதி முன்றில்மாநகர** மென்றும், இறைவன அகத்திய

முனியின் பூசைக்கு உருகி அருள் சுரந்ததால் **முனிக்குருகும்பேரூர்** என்றும், வேதங்களை குறும்பலாவாக முளைத்திருப்பதால் **குறும்பலா** வென்றும், ஆதி சக்தி பீடமிங்கிருப்பதால் **வேதசக்தி பீடபுர** மென்றும், ஞானசபையாகிய சித்திரசபை இங்கிருப்பதால் **ஞானப்பாக்க** மென்றும் அழகுஞ் செல்வமும் பொருந்திய இத்தலத்திறைவன் இரண்டையும் தன்னை வணங்குவார்க்கு ஈவதால் **நன்னகரம், திருநகர** மென்றும், ஊழி காலங்கள் தோறும் அழிவின்றி இத்தலம் நிலைத்திருக்குஞ் சிறப்புடையதால் **விசேடபுர** மென்றும், திருமால் சிவபிரானை தலமாததால் **சிவமுகுந்தபுர** மென்றும், வந்து வணங்குவோர் பிறவிக் கடல்கடந்து அழியாத முத்தியினபமெய்தலால் **முத்திவேலி** யென்றும், அருச்சுனன் சமபுடங்கண்ட இடமாதலால் **புடார்ச்சுனபுர** மென்றும், தேவர்கள் பூசிக்குந்தலமாதலால் **தேவகூடபுர** மென்றும் பலவாறாக விளங்குகின்றது. இப்பெயர்கள் வந்த காரணங்களைத் தலபுராணம் விரித்துரைக்கும்.

## புராண வரலாறு



### திருமால் சிவபிரானனது

உமாதேவியார் திருமணத்தைக் காண மூவுலகத்திலுள்ளவர்களும் இமயமலையிற கூடியபோது பாரப்பளுவால் வடதிசை தாழத் தென்திசை உயர்ந்தது. இறைவன் அகத்திய முனிவரை நோக்கித் தென்திசை சென்று வடதிசைக்குச் சமமாக்கிப் பொதிகை மலையில் வாழக்கடவாயெனக் கட்டளையிட்டார். முனிவர், தான் தென்திசை செல்வதாயின்

இறைவன் திருமணத்தையும் திருநடனத்தையுங் காண முடியாதெனவருந்த இறைவன் திரிகூடமலையின் சிறப்பைக் கூறி அங்கு விஷ்ணுவாயிருந்த தமமைச் சிவலிங்கமாக்கி மகுடாகமப்படி பூசை செய்யவேண்டுமென்றும் அப்போது தமது மணக்கோலத்தையும் திருநடனத்தையுங் காணலா மென்றும வாக்களித்து முனிவரைத் தென்திசைக்கனுப்பி வைத்தார். முனிவரும இறைவன் ஆணையைத் தலைமேற்றாங்கி தென்திசை சென்று திரிகூடமலை வந்து திருவீதி சார்ந்து சிவபிரானிடத்தில் வைத்த அன்பினாலே கோயிலுட்புக வடதிசை வாயில் காதகுங்காவலாளா விஷ்ணுகோயிலில் சிவனடியார் செல்லத்தகாதெனத் தடுத்தனர். உடன் தமக் குத்தமிழ ஓதுவித்த முருககடவுளிருக்குந்தலம் விசாரித்து இலஞ்சிக்கண் வந்து அவரிடம் முறையிட அவர் தோன்றி "வஞ்சக மறையோரை வஞ்சகத்தால் வெல்லவேண்டும் ஆத லால் வைணவ கோலத்தோடு கோயிலுட்சென்று வேதமந் திரத்தால் விஷ்ணுவை சிவலிங்கமாக்கி வழிபடுக" வென்று அருளிச்செய்து சிவாகமங்களையும உபதேசித்து மறைந்தார். அன்றிரவு அகத்திய முனிவா வெண்மணலை ஒரு இலிங்க மாகக் குவித்துப் பூஜை செய்து மறுநாளும அப்படியே செய்து இரண்டு இலிங்கங்களையும ஒன்று சேர்த்து இருவா லுக நாயகன் எனப்பெயரிட்டு (வாலுகம் - வெண்மணல்) அயன்மாலான மூர்த்தியைச சிவலிங்கமாக்க விடைபெற்று நெற்றியில் நாமமிட்டும, மிடற்றில் துளசிமாலை யணிந்தும் வைணவ வேடந்தரித்துக் குற்றாலஞ் சென்று சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் பொதுப் பெயர்களைச் சொல்லி

முத்தனே முளரிககண்ணா மூலமென்றழைத்த வேழப்
பததியி னெல்லைகாககும் பகவனே திகிரியாளா

கத்தனே யருள்சூற்கொண்ட கந்தரக் கறுப்பினனே
நத்தணி செவியகோல நாடுதற் கரியநம்பி

என்றுபாடி சங்கவீதியிற் பரவலும், வைணவர் தங்கள் குரு வென்று தலைவணங்கிக் கோயிலுள் அழைத்துச்சென்றனர்.

உட்சென்றதும் முனிவர் பூசைத்திரவியங்கள் கொண்டு வரக்கட்டளையிட்டு வலஞ்சுற்றி உள்ளே புகவும், துவார பாலகரில் ஒருவர் நேற்று வந்தவர் என்ன, மற்றொருவர் நாமறியோம் என்ன இருவர்களையுங் கையமர்த்தி அப்பாற் போய் துளபமாலையணிந்த மார்பினையும செபபொற்கிரீடம் புனைந்த தலையினையும், ஒரு கை சங்கும் ஒரு கை சக்கரமுந் தாங்கி நீலமலைபோல நீண்டு உயர்ந்துநின்ற விஷ்ணுமூர்த்தி யைத் தரிசிக்க வைணவர்கள் கொணர்நத பூசைப் பொருள் களை வாங்கிவைத்துக் கூட்டங்களை வெளியேபோக்கித் திருக் கடைக் காப்புசசெய்து, சங்கமிருந்த கையில் மான் இருக்க வும், துளபமிருந்த தலையில் மதியிருக்கவும், பொட்டிருந்த நெற்றியில் கண்ணிருக்கவும், ரத்னமிருநதமார்பில் பாம்பிருக் கவும், நீண்ட திருமேனி குறுகுக குறுகுக என்று கைலைப் பிரானை நினைந்து பரவி திருவடியின் கீழ் அணுகுமபோது

---

முத்தனே-பிரியமுடையவனே, மலரகிதன். முளரி-தாமரை; நெருப்புக்கண் மூலமெ .. பகவனே—ஆதிமூலமென் றழைத்த யானையைக காத்தவன்; வேரில மேனமை செழித்த மூங்கில் வரிசையுடைய திருநெல்வேலி காககுஞ் சிவன். திகிரி—சககரம்; கயிலை மலை. அருள்.. ... கறுப்பினனே-கருணை யுடைய நீருண்ட மேகத்தின கருநிற முடையவன்; அருள குடிகொண்ட கணடத்திற் கறுப்புடை யவன். நத்தணி....... நம்பி—சங்கை யணிந்து செவவிய அழகுடைய புருடோத்தமன்; சங்கக் குழையணிந்த காதையுடையாய்; பன்றி (விஷ்ணு) தேடவரிய உயர்குணமுள்ளவனே.

நீதி நிலைக்க, பொருள் பெருக, அறம் வளரச், சைவம் ஓங்க, விஷ்ணுமூர்த்தி திருமேனி குறுகிச சிவலிங்க வடிவாயினுர். பின் அவருக்கு அபிடேகம செய்து, ஆடையணிவித்துப் பூமாலை புனைந்து மநதிரத்தால் நிவேதித்துத் திருக்கதவைத் திறந்து திருக்குற்றாலத் திறைவனைப் போற்றி போற்றி யென்றேத்திப் புகழ்நது கீழே விழுந்து வணங்கினுர்.

வைணவர்கள் அகத்தியரைக் கண்டு விஷ்ணுமூர்த்தி யைக் காணுமல் திகைத்து அமமுனிவரை நிநதித்து அவ ரைக் கயிறறினுல் கட்ட எத்தனித்தனா. முனிவர் ஒரு தருப்பைப்புல்லை மநதிரித்துவிடவும், அப்புல் வைணவர்களை மோத அவர்கள் பயநது முனிவரை வணங்கி அபயமருளுக வெனலும முனிவா இரங்கி அவர்களை நோக்கி திரிகூடநாதர் சங்கவீதியில் தெனமேற்குப் பக்கத்தில் விஷ்ணுமூர்த்தியை (இவர்தான் நனனகரப்பெருமாள்) வைத்துப் பூசை செய் யுங்கள். சீதரன சமயமென்றும் சிவபிரான் சமயமென்றும் வேறுபாடு செய்யாதீர்கள் என்று கூற, வைணவர்களும் அங்ஙனமே செய்வோமென உறுதிகூறிச் சென்றனர். அகத் தியனுரும, கூத்தன் கோயில் ஆதி சைவப் பிராமணரை அழைப்பித்து அவாகளுக்கு அபிடேகஞ்செய்து சிவபூசை விதிகளை உணர்த்திச சிவாகமங்களை ஓதித் திருக்குற்றால நாதரை மகுடாகமப்படி பூசை செய்கவென்று உபதேசித்து பொதிகைமலை நோக்கி ஏகினா். ஏகுமுன் இறைவன் திரு மணத்தையும திருநடனத்தையும தரிசித்தார். இன்றும் இக்கோயிலில் பகற்காலம் தேவர்களும் இரவில் அகத்திய னுருங் குற்றாலத்து இறைவற்குப் பூசை செய்வதாகத் தலபுராணங் கூறுகின்றது.

குறுமுனி திருமாலைச் சிவனுக்க, அவரைத் தன் கைகளால் தொட்டதால் மூலஸ்தானத்தில் சிவலிங்கத்தின்

தலைப்பாகத்தில் ஐந்துவிரல்களும் பதிந்திருக்கின்றன. திருமுகச்சாயலும் நுட்பமாகத்தெரிகின்றது குறுமுனிதமமைத் தொட்டு அமுக்கியதால் இறைவனுக்குத் தலைவலி உண்டாயிற்றென்றும், அதை நீக்கவே நாடோறும் தைலமுழுக்குச் செய்கிறாரென்றும் ஒருவழக்கு கர்ண பரம்பரையாய் வழங்குகின்றது. "குற்றாலநாதருக்கு வற்றாக் குடிநீரும் மாறாத் தலையிடியும்" என்ற ஒரு பழமொழியுமுண்டு. சிவபெருமான் திருமாலாயிருந்த காலத்தில இத்தலம 'திருமுறறம' என்றழைக்கப்பட்டதெனப் புராணம் கூறுகிறது (ப. 212 பா. 130). ஆதியில் இத்தலப் பெருமான் திருமாலாயிருந தாரென்பதற்கு புராணககூற்று தவிர வேறு அகசசான்றாவது புறசசான்றாவது கிடைக்கவில்லை.

## கயேந்திர மோட்சம்

அகத்திய முனிவர் தென்திசை வரும்போது இந்திரத்தூய்மன் என்னும் சந்திரகுலத்தரசன் எதிர்சென்று அவரை வணங்காமல் நிற்கவும், இவவரசன் யானையாகக்கடவதென முனிவர் சாபமிடலும் உடனே அரசன் கயேந்திரன் என்னும் யானையாகி நெடுங்காலந்திரிநது திரிகூடமலையைசசுற்றி வந்து தென்கீழ்த்திசையில் ஒரு சுனையில் நீராருநதுடபோது சுனையிலுள்ள ஒரு முதலை யானையின் காலைப் பிடித்திழுக்க யானை வலியிழந்து மூலமே யென்றோலமிட்டலறவும் திருமூர்த்திகள் வடிவெடுத்த முழுமுதலிறைவன் இத்தலத்தில் விஷ்ணுவாயிருந்த நாள் தன் சக்ராயுதத்தால் முதலையைக் கொன்று யானையை விடுவித்தார். யானையும் தன் வடிவம் நீங்கித் தேவ வடிவம் பெற்றுச் சுவர்க்கமெய்தியது.

## அருச்சுனன் சம்புடங் கண்டது

பாரதப்போரில் துரியோதனனதியரை வெல்ல அர்ச்சுனன் சிவபிரானிடம் பாசுபதாஸ்திரம் வேண்டிக் கடுந்தவஞ்

கிடந்தான். இவன் அன்பை உலகத்தாருக்கு வெளிப்படுத்த நினைந்து இறைவனும இறைவியும வேடர் வடிவம் பூண்டு ஒரு பன்றியைத் தேடுபவர்போல வந்து அர்ச்சுனனுடன் இறைவன் போர்புரிய அர்ச்சுனன், இறைவன் தலைமேல் வில்லாலடித்தான். இறைவன் அடிதாங்கமாட்டாதவாபோற் பாவனைசெய்து இறைவியுடன் மறைந்தனர். மறைந்தது இன்னுதென்று அர்ச்சுனன் தேடிக்காணுதபொழுது தன் விபூதிச சம்புடத்தையுங் காணுமல் திகைத்து உடல் சோரவும இறைவன விண்ணிலே தோன்றி 'அப்பனே! திரிகூட மலை சென்று சமபுடத்தைப் பஞ்சதரிசனத்துடன் காண்' என்று கூறிப் பாசுபதாஸ்திரம அருளினுர். அர்ச்சுனன் அதைப்பெற்றுத் திருக்குற்றாலம் வந்து பங்குனி உத்திர நாளன்று சங்கவீதி சுற்றிப பூசனை செய்து மேற்குமுகமாம் ஈசன, விநாயகன், சிகரம, குன்றம, தேற்றுதேனுேடு ஐநது தரிசனம பரிவாற்பெற்று அவவிடத்திலேயே தன துன்பம நீங்க அவ்வைந்துடன் ஆறுவதாகச் சமபுடத்தையுங் கண்டெடுத்துத்தன் ஆகம் ஆவியைப்பெற்றதுபோல் மகிழ்ந்தான். சங்கவீதி சுற்றி வருகின்றவாகள் மேலப்பிரகாரத்தில் இந்த இடத்தில் நின்று இன்றும பஞ்சதரிசனஞ் செய்வது வழக்கம. பங்குனி உத்திரநாளில் இப்பெருமானுக்கு விசேட வழிபாடு நடத்தி விபூதிப்பை பக்தர்களுக்கு வழங்கப்படும்.

## தலவிருக்ஷ வரலாறு

தலவிருக்ஷமாகிய குறும்பலா மிகவுஞ் சிறப்பு வாய்ந்தது. வேதங்கள் என்றுமழியாமல் நின்று இறைவனை வழிபட விரும்பிக் குற்றாலச செண்பகக் காவில் வந்து பலாமரங்களாகித் தவங்கிடக்க இறைவன் அவ்வாமீந்தார். உடனே நான்கு வேதங்களும் ஒன்றுகூடி ஒரு பலாமரமாகி பிரணவும்

வேராகவும், பாகை இரண்டு கவடாகவும், சுருதி முழுவதும் கிளைகளாகவும் இன்றும் நின்று தன் நிழலிலுள்ள சிவனைத் தொழுதுகொண்டிருக்கின்றன. இம்மரத்திற் பழுக்கின்ற பழங்களை யாவரும் பறிப்பதில்லை. குரங்குகளே கீறித் தின்னும். கீறிய பழத்திலுள்ள தேன் கீழே வீற்றிருக்கும் இலிங்கத்தின்மேற் சொட்டி அபிடேகஞ்செய்யும். குற்றாலக் குறவஞ்சியில்

'கிளைகளாய்க் கிளைத்தபல கொப்பெலாஞ் சதுரவேதங்
கிளைகளீன்ற
களையெலாஞ் சிவலிங்கங் கனியெலாஞ் சிவலிங்கங்
கனிகளீன்ற
சுளையெலாஞ் சிவலிங்கம் விதையெலாஞ் சிவலிங்க
சொரூபமாக
விளையுமொரு குறும்பலவின் முளைத்தெழுந்த சிவக்
கொழுந்தை வேண்டுவோமே"

என்று தலவிருக்ஷத்தின் பெருமை யுரைக்கப்பட்டிருக்கின்றது. இவ்விருக்ஷம் திருஞானசம்பந்தர் பாடிய திருக் குறும்பலாப் பதிகமுடைய தனிப்பெருமையுடையது.

## தீர்த்த விசேடம்

இத்தலத் தீர்த்தம் சித்திரகங்கை திரிகூடமலையிற் பிறந்து சிவமதுகங்கை, செண்பகத்தடம், பொங்குமாகடற் றுறை யென்று மூன்று துறைகளையுடையது. குற்றாலநாதருக்கு வலப்பக்கத்தில் மிகச் சமீபமாக விளங்கி வற்றாமல் ஓடிக்கொண்டிருக்கும் அருவியாய் விழுகின்ற இத்தீர்த்தம் முழுகுபவர் பாவங்களைக் கழுநீராகப் பிரித்துப் போக்கிவிடுமென்று தலபுராணஞ் சிறப்பிக்கின்றது. காலை, உச்சி, மாலை, இரவு நீராடினும் இனிமையான பலனையே கொடுக்கும். இப் பலன் விபரங்கள் முன்னரே குறிக்கப்பட்டுள்ளன. கங்கா

தேவி சிவபிரானையு மறியாது கீழே குதித்து வந்தபோது சிவபிரான் தன் சடையில் அவளைத் தாங்க, இவள் ஒடுங்கி இறைவனிடம் மன்னிப்பு வேண்ட அவர் ஆணையின்படி திரிகூடமலை வந்து உச்சியிலுள்ள சிவலிங்கத்தைத் தேனால் பூசித்தலும் சிவபிரான் அவள் பாவந்தீர்த்து ஏற்றுக்கொண்டார். கங்கை சிவபிரானைத் தேனால் பூசித்ததால் இது சிவ மதுகங்கையாயிற்று. தேனருவி என்பது உலக வழக்கு.

## பராசக்தி கோயில் அல்லது தரணிபீடம்

திருக்குற்றாலநாதர் கோயிலுள் வடபால் பராசக்திபீட மென்ற அழகிய சிறு கோயிலிருக்கின்றது இங்கே நவ கோணத்துள்ளே மேலு மேலும் பல இதழ்கள் கொண்ட ஓர் பீடமுள்ளது. இது கருணைவடிவாகிய பராசக்தி பீடம். பராசக்தி மேலான யோகத்தில் இருப்பதாலே யோகபீட மென்றும், உலகமெல்லாந் தோற்றுவித்தற்கு மூலமாயிருத்தலாலே தரணிபீடமென்றுஞ் சொல்லப்படும். இப்பீடம் அறுபத்துநான்கு சக்திபீடங்களில் ஒன்று. சிவன் சிற்பரை யின் மந்திர சக்கரங்கள் அடங்கிய ஆலயம் சிவபெருமான் ஆன்மாக்கள் உய்யுமபடி உலகைப்படைக்க எண்ணுங்கால் அவனில் ஒடுங்கியிருந்த சிவசக்தி அவனோடியைந்து நின்றே அவனை விட்டுப்பிரிகிறது சிவசக்தி உயிர்களின் மலத்தை நீக்கவேண்டுமென்று இச்சித்தபோது பராசக்தியெனப் பெயர்பெறும். இச்சத்தி உலகத்துடன் சமபந்தப்படாது நிற்கும். தொழில் செய்வதற்கு உலகத்தோடு சம்பந்தப் படும்போது ஆதி சக்தி அல்லது திரோதான சக்தியெனப் பெயர் பெறும். இந்த ஆதிசக்தி தனது இச்சை அறிவு செயல்களை முறையே விளக்குமுகத்தால் தொழில் புரிவாள். அவ்வாறு செய்யுங்கால் சிவசக்தி ஆன்மாக்களுக்கு நேரே தொழில் புரியாது தத்துவங்களை இயக்க அவற்றால் ஆன்

மாக்களிடம தொழில் நிகழ்கின்றது. பாாசக்தி, அரி அயன் அான் மூவரையும ஒவ்வொரு கருப்பத்தில் பயநதாள். இவள் சன்னிதானததில் இவர்கள் விளையாடுந் தாணுமாலயப பூந்தொட்டில் ஆடிகொண்டேயிருக்கிறது. ஒவ்வொரு வருடமும் புாட்டாசியில் நவாாத்திரி விழா மிகச சிறப்பாகக் கொண்டாடப்படும. குங்கும அபிடேகம, இலட்சாாச்சனை, விசேட அலங்காரம் விமரிசையாய் நடக்கும. விஜயதசமி யன்று வெற்றி முரசு ஒலிக்க, மத்தளங் கொட்ட, சங்க நாதம் பெருக ஒரு வகை முழக்கத்துடன் விரைவாய் இறைவி வெற்றிகொடி கொண்டு வருவது மனதைக்கவரும. 1125-ம் ஞ ஐப்பசிமீ 3வ புதன்கிழமையன்று மூனறு வருடங்கள் ஊமையாயிருநத 12 வயதுள்ள மீனுக்ஷி (தணிக்கையாளா திரு K. S D. மூாத்தி ஐயரவாகள் குமாரி) என்ற சிறுமி பாாசக்தி முன் தவங்கிடக்க தேவி இவள்முன் சிறுகுழநதை வடிவிறதோன்றி தன்னைப் பாடுபடி கேடக வும இசசிறுமி தேவியைப் பாட ஆரமபித்தாள். பாடலைக கேட்டதும தேவி மறைநதாள். அதுமுதல் மீனுக்ஷி பேச ஆரமபிததுவிட்டாள். இவ்வளவு திரு அருள் நிறைநத இடம இந்த பாாசகதி கோயில். இநத அதிசயம செய்தித் தாள்கள் மூலம் உலகெங்கும பரவிற்று. (See 'Prediction' March 1950 P. 24 (London Monthly) இப்போது புதிதாய் எழுதிய ராஜராஜேஸ்வரி, சரஸ்வதி, இலககுமி திருஉருவப் படங்கள் கோயில்முன்நிலை அலங்கரிக்கின்றன.

## குற்றாலம் என்ற பெயர் வந்த காரணம்

திருக்குறறாலத்தில் முழுமுதலிறைவன் உமாதேவியி னிடத்து உலகமெல்லாமுண்டாதற்குக குற்றாலம, கோவி தாரம, சமருகம என்று மூன்று பெயருடைய வரையாத்தி மரநிழலிலே எழுநதருளியிருத்தலால், அமமரப பெயரில்

ஒன்றாகிய குற்றாலமென்பது ஆகுபெயராய் இத்தலத்துக் குப் பெயராயிற்று. 'கு' வென்பது பூமி அல்லது பிறவிப் பிணியென்றும், 'தாலம்' என்பது தீர்ப்பது என்றும் கு + தாலம் என்பது குத்தாலமென்றாகிக் குற்றாலமெனத் திரிந்து பிறவிப்பிணியைத் தீர்க்குந் தலமென்று பொருள்கொள்வார் ஒரு சாரார். ஆதிசக்தி மூவரைப் பயந்ததாலும், தலம், தீர்த்தம், மூர்த்தி யென்ற மூவிசேடத்தாலும் திருக்குற்றா லத்துக்குத் திரிகூடமென்ற பெயர் வந்ததென்றுந் தல புராணங் கூறுகிறது.

## குற்றாலக் கோயிலின் தொன்மை

ஆன்மாக்கள் இன்பமெய்தும் பொருட்டுச் சிவபிரான் பார்வதி தேவியாரைத் திருமணஞ் செய்யுங்காலத்திற்கு முன்னரே இத்தலம் இருந்ததென்றால் அளத்தற்கரிய காலங் களுக்கு முன்னே தோன்றிய அநாதியாய்உள்ள தலம் என னும் பெருமையுடைத்து இத்தலம். சைவ சமய குரவர் களாகிய திருஞானசம்பந்த சுவாமிகள் காலமும் அவர் காலத் திருந்த திருநாவுக்கரசு சுவாமிகள் காலமும் கி. பி. 7-ம் நூற் றாண்டின் இடைக்காலமென்று கல்வெட்டுகள்கொண்டு வரை யறுக்கப்பட்டிருக்கிறது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் இவ்விரு வர்களுக்கும் பிற்பட்டவர் என்பது யாவரும் ஒப்புக்கொள்கிற உண்மை. இத்தலத்தில் திருஞானசம்பந்தர் வந்து வழிபட் டிருப்பதனால் இத்தலம் கி. பி. 7-வது நூற்றாண்டுக்கு முற் பட்டதென்பதற்கு ஒரு ஐயமும் இல்லை. தற்கால ஆராய்ச்சி யாளர்கள், இத்தலத்தில் வந்து வழிபட்ட மாணிக்கவாசக சுவாமிகள் மற்ற மூன்று சமய குரவர்களுக்கு முற்பட்டு கி பி மூன்றாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் திகழ்ந்தா ரென்று அநேக ஆதாரங்களுடன் ஒன்றித்து முடிவு கட்டு

கின்றனர். ஆகவே இத்தலம் கி. பி மூன்றும் நூற்றாண்டுக்கும் முற்பட்டதெனபது வெளியாகிறது.

இது ஒருபுறமிருக்க, கடைச்சங்கப் புலவராகிய கபிலர் இயற்றிய ''சிவபிரான் திருவந்தாதி''யில் 80, 84, 87-ம் பாட்டுகளில் இத்தலத்தைப்பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. கடைச்சங்கம் இப்போது சற்றேறக்குறைய 2000 வருஷங்களுக்குமுன்னர் 1850 ஆண்டுகள் தமிழ் ஆராய்ந்து வந்ததென்று பேரறிஞர் முடிவுகட்டியிருக்கின்றனர். ''சிவபிரான் திருவந்தாதி'' பாடிய கபிலர் கடைச்சங்கத்தில் தமிழ ஆராய்ந்த புலவர்களில் ஒருவரென்பது மறுக்கவொண்ணாத உண்மை. ஆயின் அகத்தியர் தென்திசை வந்த காலமுங் கயேந்திரன் மோட்சமடைந்த காலமும அருச்சுனன் பாசுபதாஸ்திரம பெற்ற காலமும் சரித்திர ஆராய்ச்சியாளரால் இன்னும் அளக்கமுடியவில்லை. இச்சமபவங்கள், கடைச்சங்க காலத்திற்கு முற்பட்டவையென்பது மட்டும உறுதி. இக காரணங்களால் இககோயில் 2000 வருஷங்களுக்கு முற்பட்டதென்பதும அதற்கு முன்னுள்ள தொன்மையை நிச்சயிக்க முடியவில்லையெனபதும பெறப்படுகின்றது

## கல்வெட்டுகள் விபரம்

இத்தலத்தைப்பற்றிய கல்வெட்டுகள் ஏராளமாக உள்ளன. இவற்றைத் தென்னிந்தியக் கல்வெட்டுப்பதிவு நிலையத்தினர் (Department of Epigraphy) எடுத்து எழுதியிருக்கின்றனர். அவை 1895-ம் வருடத்து 203, 204 எண்களுள்ள கல்வெட்டுகளாக எழுதப்பட்டு தென்னிந்திய சிலா சாஸனங்கள் பகுதி 5 ல் 767, 768-ம எண்களாக வெளிவந்துள்ளன. 1912-ம் வருடத்தில் 25-ம் எண்ணுக எழுதிய கல்

வெட்டின் சுருக்கம் அவ்வருடக் கல்வெட்டு அறிக்கையிலும் 1917-ம் வருடத்தில 404 முதல் 489 எண்களாக எழுதிய கல்வெட்டுகளின் சுருக்கம 1917—18-ம வருட அறிகசை யிலும் வெளியிடப்பட்டிருக்கின்றன

மேற்கூறிய 89 சாஸனங்களுள் 14 சோழமன்னர் காலத்தைக் குறிப்பிடுகின்றன. ஏனைய பாண்டிய அரசர் காலங்களைக குறிககின்றன. 18 கல்வெட்டுகள் வட்டெழுத்தி லிருககின்றன. இவற்றால் கி. பி 10 ம நூற்றாண்டிலிருந்து கி பி 16-ம நூற்றாணடுவரை இக்கோயிலின வரலாறறுக் குறிப்புகள ஒருவாறுகக் கிடைககின்றன.

கி. பி. 10-ம நூற்றாண்டில் சோழநாட்டை அரசாண்ட பரகேசரிவாமன என்ற முதல் பராந்தகன் காலத்திலுள்ள 10 கல்வெட்டுகள வடடெழுத்திலும ஒன்று தமிழெழுத்தி லும இருககின்றன. இரணடு கல்வெட்டுகள் இமமன்னனை மதுரைகொணட பரகேசரிவர்மன என்று குறிபபிடுவதால் பாணடியநாட்டின் தலைநகராகிய மதுரையை வென்று அந் நாட்டனைத்தையுஞ் சோழ நாட்டுடன் சேர்த்துக்கொண்டான் என்று தெரிகிறது. இவனுக்குப்பின் வந்தவனும் திரு விசைப்பாப்பாடிய கண்டிராதித்தா தமபியின் பேரனுமாகிய பெரிய ராஜராஜசோழன் ( Raja Raja the Great ) கி. பி. 980—1013 காலததில் இக்கோயில் ப ழு து பார்க்கப்பட் டிருக்கிறது. ஈழமணடலத்தைச் சேர்நத கோட்டூர் நாட்டி லுள்ள விக்கிரமபாண்டிபநல்லூர் மக்கள் திருககுற்றாலநாதர் நந்தாவிளக்கு வகைககு நிலம அளித்திருககிறார்கள். இவன் காலத்திலுள்ள கல்வெட்டுகளிலிருந்து பாண்டிய நாடும் ஈழநாடும் சோழர் ஆட்சிககுள் இருநதனவென்று புலனு கின்றது. தவிர, கோயில் பழுது பாாக்கவேண்டிய நிலைமையி

விருந்ததால் முன்னால் வட்டெழுத்திலிருந்த சாஸனங்கள் தமிழில் திரும்பி எழுதப்பட்டனவென்றுந் தெரிகிறது. இங்ஙனங் கூறுவதால் தமிழ்மொழி 10 ம நூற்றாண்டுக்கு முன் வட்டெழுத்துடையதென்றும், பின்னரே இப்போதுள்ள எழுத்துக்கள் இவ்வரசன்கால முதல் பாண்டியநாட்டிற் பரவிவந்ததென்றும ஊகிக்கலாம். இவனுக்குப் பின் வந்த ராஜகேசரிவர்மன் காந்தளூரில் தன்னுடைய எதிரி கப்பற் படைகளை அழித்ததாக மற்றொருகல்வெட்டுக் கூறுகின்றது.

பாண்டிய அரசன் சடையன்மாறன் ஆட்சியில் "பாசுபதப் பெருமக்கள்" என்ற ஆலோசனைசபை யிருந்ததாகத் தெரிகிறது. கி. பி. 1216 முதல் 1235 வரை மாறவர்மன் சுந்தரபாண்டியன் அரசாண்டிருக்கிறான். இவன் சோழநாட்டை வென்று முடிகொண்ட சோழபுரத்தில் தன்வெற்றியைக் கொண்டாடினான். இவன் காலத்திலும "ஐந்நூற்றுப் பன்னிருவர்" கொண்ட ஆலோசனை சபையொன்றிருந்தது. நீட்டலளவைக்காகச "சுந்தரபாண்டியன்கோல்" என்ற அளவுகோல் நிர்ணயிக்கப்பட்டது.

கி. பி. 1249 ல் பட்டம்பெற்ற மாறவர்மன் விக்கிரம பாண்டியன் காலத்தில் ஊர்ப்பொதுமக்களால் குறுமறை நாட்டைச்சேர்ந்த சுந்தரபாண்டியபுரத்தில் தேவநாயகன், ஆண்டாபிள்ளை யென்றிருவர்களுக்கு நிலங்கள் ஜாரிசெய்யப்பட்டுத் தீர்வையை இக்கோயிலுக்குச செலுத்தும்படி உத்தரவு பிறந்தது. கி. பி. 1253 ல் பட்டத்துக்கு வந்த ஜடாவர்மன் வீரபாண்டியன் ஈழம், கொங்கு, சோழமண்டலங்களைப் பிடித்தும், பல்லவர்களை முறியடித்தும பெரும்பற்றப்புலியூரில் (சிதமபரம்) வெற்றிகொண்டாடினான். திருக்குற்றாலச் சமுதாயத்தாரைத் திருமுக்கால்வட்டத்தில் சந்தித்து (திரு

முக்கால் வட்டம் - ஆலோசனைக்காகக் கூடுமிடம் (Cabinet room) கோயில்கள் விஷயமாக ஏற்பாடுகள் செய்துவந்தான். சமுதாயத்தாரும் கோயிலுக்காகச் சுந்தரபாண்டியபுரத்தில் நிலங்கள் வாங்கிச் சிலவற்றை ஆண்டாபிள்ளை யென்பாருக்கு சாஸ்வதக் குத்தகைக்கு அடைத்து நெல்லும் பணமுமாகக் குத்தகையைவசூல் செய்துவந்தனர். புதிதாய்ச்சாகுபடிக்குக் கொண்டுவருகிற ஒவ்வொரு மா அளவுள்ள நிலத்துக்கும் முதல் வருடம் ஒரு கலம நெல்லும், இரண்டாம வருடம் 2 கலம் நெல்லும, இப்படியே ஒவ்வொரு வருடத்துக்கும் அதிகப்படுத்தி நிலத்தின் தரத்துக்குத் தகுந்தவாறு வசூலித்து வநததாகவுந் தெரிகிறது. இவ்வரசன், கோயில் வேலையாட்கள் ஒழுங்காய் வேலை பார்க்காததால் அவர்களை நீக்கி, அவர்கள் வசமுள்ள மானிப நிலங்களையும் மீட்டிப் புதிதாய் நியமிக்கப்பட்டவர்களுக்குக் கொடுத்தான்.

கி. பி. 1314-ல் வந்த ஜடாவர்ம சுந்தர பாண்டியன் வென்று முடிசூடினன் என்ற வீரப் பெயர் கொண்டான் என்றும், வென்று முடிசூடிய சுந்தரபாண்டியன் பட்டணத்தில் ஒரு அன்பனுடன் கோயில் விசேட வழிபாடுகளுக்காக ஏற்பாடுகள் செய்யப்பட்டனவென்றும மற்றொரு கல்வெட்டுக் கூறுகின்றது. கி. பி. 1384-ல் அரசுசெய்த ஜடாவர்மன் பராக்ரம பாண்டியதேவன் கோயில் பூசாரிகளுக்கு நிலங்கள் இறுமளித்து பூசைமுறையும் வகுத்துக்கொடுத்தான். கி. பி. 1387-ல் சுவாமி கோயில் கர்ப்பக்கிரகம், அர்த்தமண்டபம், மகாமண்டபம் சிகரங்களைப் பழுது பார்த்துப் புதுப்பித்திருக்கின்றான். கி. பி. 1410-ல் வீரமார்த்தாண்ட பராக்ரம பாண்டியனும் கோயிற்கட்டிடத்தில் அரிய வேலைகள் செய்து செம்மைப்படுத்தியிருக்கிறான்.

இலஞ்சியில், கி.பி. 1408ல் கோயில்கட்டிய மாறவர்மன் குலசேகரன், திருக்குற்றாலநாதர் முன் வேதபாராயணஞ்

செய்ய 11 சாஸ்திரிகளுக்கு நிலங்கொடுத்து மூலஸ்தானத் திற்கு வெள்ளிக்கிழமைதோறும் பூ ஞூால் சாற்றவேணு மென்றும் ஏற்பாடு செய்தான். கி பி 1428—1472-ல் அரசாண்ட குலசேகரபாண்டியன் தன் முன்னேனுகிய சுந்தர பாண்டியன் சந்தி பாடுவதற்காக நிலம அளித்தான். கி. பி. 1582-ல் குற்ருலமுடைய நயினுர்கோவில் பூசைக்குப் பிரா ஞூர் கிராமத்தில் நிலம் விடப்பட்டது கொல்லம் பறம்புப் பக்கத்தில் தட்டப்பாறை யென்ற பாறையிலுள்ள ஒரு கல் வெட்டு வைகுண்ட நாட்டைச் சோநத பெரும பழஞ்சியி லுள்ள ஒரு அன்பன் இக்கோயில் திருக்காமக கோட்டத்துப் பெரிய நாச்சியாருக்குப் புலியூர்ப்பற்றில் நன்செய்நிலம மாற வர்மன் பாண்டியன் காலத்தில அளித்ததாக அறிவிக்கிறது. மேலகரம் விநாயகர் கோயிலிலிலுள்ள ஓர கல்வெட்டு கி பி. 1677-ம வருடத்தில் குற்ருலநாதா பூசைகரு இறைவரியின்றி நிலம் அளிககப்பட்டிருக்கிறதாகத் தெரிவிக்கிறது.

திருஞானசம்பந்தர் முதலியோரியற்றிய, தேவார திரு வாசகங்கள் பாடவும், புராணம் வாசிக்கவும, இசைகள் பாட வும் மற்றும் கோயிற் காரியங்கள் நடத்தவும அரசர்களால் நிலங்கள் அளிக்கப்பட்டிருக்கின்றன. கோயில் நிர்வாகமும் ஒரு பஞ்சாயத்தாரால் நடத்தப்பட்டதாக அறிகின்ருேம். பிரகாரத்திலுள்ள தனிக் கோயில்கள் பிற்காலத்தில் பல பல அன்பாகளால் ஸ்தாபிக்கப்பட்டு அவற்றின் பூசைகளுக்கு நிதியும் நிலமும் வழங்கப்பட்டன. அக்காலத்துப் பெண்மணி களும அன்பில் ஈடுபட்டு குழல்வாய்மொழி யம்மையார் திருமஞ்சனத்திற்கு ஏற்பாடுகள செய்து பெருமையடைந் திருக்கின்றனா. எத்தனையோ அன்பாகள் திருவிளக்கேற் றல், திருமஞ்சனம், அமுதளித்தல், வேதம ஓதுதல், திரு முறை ஓதுதல் முதலிய பல் வகை அறங்களுக்காக நிலம்,

பொன், வெள்ளி, பாத்திர பண்டங்கள், பசு, எருமை, ஆடு, மாடு முதலிய கால்நடை நன்கொடையளித்த நற்செய்திகள் வெளியாகின்றன.

## சில கல்வெட்டுகள்

கல்வெட்டு நிர். 452—1917. சகாப்தம் 1368 மேஷம் 15 சதுர்த்தசி ஞாயிறு ஹஸ்தம் வீரபாண்டிய தேவர். மாதந்தோறும் முதல் 10 நாட்கள் இசை பாடுவதற்காகக் கூத்தன்பெற்றபெருமாள் ருத்ரதேவனுக்கு பாண்டிய அரசன் வீரபாண்டிய தேவனால் நிலமும பணமும அளிக்கப் பட்டிருக்கின்றன (சுவாமி கோயில் முதற்பிரகார வடக்குச சுவரில் எழுதப்பட்டுள்ளது)

நிர். 463. பாண்டியர். சகா. 1453. கொல்லம் 707. மகரம 17. சப்தமி; ஞாயிறு, அஸ்வதி. உஷத் காலத்தில் பராக்ரமபாண்டியன் சநதிபாடுமபோது வேதமஓத மேலகரம் கைலாசநாத படடருக்கு நிலம மானிபம் (முதற் பிரகாரம் தெற்குச சுவரில்).

நிர். 475. பாண்டியர். சகா 1467. மூன்றுவது வருடம் ஸ்ரவண. திருஞானசமபந்தா முதலியோர் பாடல் பாட மெய்கண்டதேவன சிநதாமணிககு ஜடிலவர்ம பாண்டிய அரசனால் நில மானிபம. (குழல்வாய்மொழியம்மன் கோயில் முன் மண்டபம தெற்குச்சுவர், கிழசசுவர்களில்).

நிர். 450. சகா 1474; 8-வது வருஷம். விரோதுகிருது கற்கடக 20; பா. தி. திவிதீய, ஞாயிறு; அவிட்டம். கோயில் கணக்குகளைப் பார்வையிட அழகியசொக்கனுக்கு ஜடிலவர்ம பாண்டிய அரசனால் நிலம்மானிபமும் பண முடிப்பும் (சுவாமி கோயில் முதற்பிரகாரம் கிழசசுவரில்)

நிர். 481 ஜடிலவர்மன் என்ற திரிபுவனச்சக்ரவர்த்தின் கோனேர்மை கொண்டான் குலசேகரதேவன் என்ற பராக் கிரமபாண்டிய—அபிராம பராக்கிரமபாண்டியன் மகன் சகா 1474. விசேட தினங்களில் திருக்குற்றாலமுடையார் சந்நிதியில் புராணம் வாசிக்க பாண்டியன் அழகன் பெருமாளால் நிலம் நன்கொடை. (குறும்பலாக்கோயில் தெற்குச்சுவரில்)

நிர். 409. ஜடிலவர்மன்......ஸ்ரீ வல்லபதேவ பாண்டிய; சாகை 1402; 7-வது வருஷப்; சுக்ல; உத்தராயண; சிசிரிது; மீனம்; 3; பா. தி. தசமி; செவ்வாய், மூலம. கணக்கு வேலை பார்க்க மேலகரம் முத்தி அதிவீரராயா மழவராயருககு ஸ்ரீ வல்லபதேவ பாண்டிய அரசனல் நிலம மானிபம். (சுவாமி கோயில் மண்டபம் கிழச்சுவர், தெற்குசசுவரில்).

நிா. 488. பாண்டியன். சகா. 1498. திருநெல்வேலிப் பெருமாள் வீரவெண்பாமாலை அரசன் குமாரன் குறறால முடையாா அபிஷேகத்துக்காகச சில நிலங்களின் திரவை யையும், இலஞ்சியில் சில நிலங்களையுமு அளித்தான். (கோயிலுககுத் தென்புரமுள்ள ஒரு கற்றூணில்).

நிர். 485. சகா 1512. திருக்குற்றாலமுடையார் கோயிலில் இடத்து வேலியூர் அன்பன் ஸ்தாபித்த ஸஹஸ்ரலிங்கத்துக்கு அபிஷேகம, பூசைக்காகக் குணராமநல்லூரில் ஸ்ரீ வல்லபதேவ பாண்டியன் காலத்தில் நிலம இறைம். (தரணி பீடம வடக்குச் சுவரில்).

நிா 482. சாகை. 1513. பச்சையப்ப நாயகராற் பிரதிஷ்டை செய்யப்பட்ட சியாயநாதருக்கும நாஹேஸ்வரி அம்மனுக்கும் அபிஷேகம பூசை வகைக்காக அழகன்பெருமாள், வரதுங்கபாண்டியன் இவர்கள் உத்தரவால் குணராம

நல்லூரில் குளப்புரவு நிலங்கள் இறும் (சுவாமிநாதசுவாமி கோயில் வடக்குச் சுவரில்).

## திருப்பணி

சோழமன்னர்களும், பாண்டியமன்னர்களும் இக்கோயி லில் கர்ப்பக்கிரகம், அர்த்தமண்டபம், மஹாமண்டபம் சிகரங்கட்டியும், புதுப்பித்தும், இன்னும் பலவிதமாகப் பண் படுத்தியும் பெரிய பணியாற்றினரென்று கல்வெட்டுகளி லிருந்து வெளியாகின்றது. பின்னர் இச்சில்லா வடகரை ஆதிக்கம் சொக்கம்பட்டிக் குறுநிலமன்னர் இக்கோயில், திரு மலை, தென்காசி முதலிய இடங்களில் அநேக இறை பணி செய்து புகழ் தேடிக்கொண்டார்கள். 14-ம் நூற்றுண்டின் முதற்பட்டம செம்புலிசின்னணைஞ்சாத்தேவர் குற்றுலிங்கம் குழல்வாய்மொழியம்மன் கோயில் பொது முகப்புமண்டபஞ் செய்து முடித்தனர். செலவு 28085 பொன். குற்றுலம் அன்னசத்திரம கட்டினார். இவர் ஸ்தானுதிபதி வயித்தி யப்பபிள்ளை. வயித்தியப்பவிலாச மண்டபங்கட்டிமுடித்தார். செலவு இரண்டுக்கும் 4300 பொன். இரண்டாம் பட்டம் வீரபாண்டியன் காலத்தில் (1434—1461) குற்றுலிங்கம் குழல்வாய்மொழி உட்சுற்றுப் பிரகாரம் செய்து முடிக்கப் பட்டது. செலவு 30251 பொன். ஆறுவதுபட்டம் குலசேகர ராஜா (1536—1596) காலத்தில் குற்றுலநாதசுவாமிகோயில் தட்டொட்டியும், பசுப்பிரையும் கட்டப்பட்டன. ஏழாவது பட்டம் சின்னணைஞ்சாத்தேவர் (1596—1629) தீர்த்தமண் டபம், சுற்றுப்பிரகாரம், நடை கற்பாவல் முதலிய திருப் பணிகள் நடத்தினர். செலவு 17201 பொன். எட்டாவது பட்டம் சிவனடியாத்தேவர் (1630—1659) துவஜஸ்தம்பம் அஷ்டபந்தன கும்பாபிஷேகம் செய்து முடித்தார். செலவு 7501 பொன்.

பின்னர், 1660—1721 வரை இருந்த பெரிய பட்டம் பெரியசாமி, செம்புலி, சின்னணைஞ்சாத்தேவர், சின்னப் பட்டம் இராஜகோபாலத்தேவருஞ் சேர்ந்து சாசிபராக்கிரம பாண்டியன் செய்த சித்திரசபைக்குச செப்போடு வேய்ந் தார்கள். மேலைச்சபை கீழச்சபை கல்வரி தளவரிசைத் திருப் பணி நடத்தினர். ஸ்படிகலிங்கம அமைத்தனர். சித்திரங்கள் எழுதிவைத்தார்கள். மொத்தச செலவு 14160 பொன். சபை சுற்றுச்சிகரம் முன்மண்டபம், தெப்பக்குளம, நடுமண் டபம், கோபுரஞ் செய்து முடித்தனர். செலவு சுமார் 20,000 பொன். சித்திரசபைக்குச செப்போடு வேய்ந்த அரிய சேவையைக் குற்றுலக்குறவஞ்சி ஆசிரியர் "நன்னகாக்குற் ருலந்தன்னில் எங்கும் — நாட்டுமெண்ணூற்றெணபத்தே ழாண்டு தன்னில் — பன்னகமாமுனி போற்றத் தமிழ்ப் — பாண்டியனுர் முதற்சிற்ருேடு மேய்ந்த — தென்னுருஞ் சித்ர சபையை யெங்கள் — சின்னணைஞ்சாத்தேவன் செப்போடு மேய்ந்த முன்னுளில்" என்று கூறிப் பெருமைப்படுத்தி யிருக்கின்ருர். கொலுமண்டபம், திரிகூடமண்டபம, தேர் மண்டபம், இப்போது கடைகளிருக்குமிடமாகிய பரமானந் தப் தோப்பு, குறிஞ்சிப் படித்துறைகள் இவர் காலத்தில் ஆக்கப்பட்டனவென்று குறவஞ்சி முதலிய நூல்களினின்று வெளியாகிறது. தெய்வப்பணியில் முன்னின்ற இவவிரு சகோதராகளும திருக்கோயிலில் குற்றுலநாதர் சன்னதியில் கொடிமரத்தின் தென்பக்கம் வடக்குநோக்கிய தூண்களில் கல்சிலையாக நின்று இன்றும் வழிபடுகின்றனர்.

மூன்றும் பட்டம் காளத்தியப்பத் தேவர் சுவாமி தேர், அம்மன் தேர், விநாயகர் தேர், சுப்பிரமணியர் தோ செய்து கொடுத்தனர். செலவு 4200 பொன் அக்காலத்துப் பொன இக்காலத்துப் பவுன்போல மதிப்புள்ளது. (மதிப்பு ரூபாய்

2—1—4) சொக்கன்பட்டிக் குறுநில மன்னரில் ஒருவரின் மனைவி வெளிபபிரகாரம முற்றிலும கல்வரிசை பாவுதற்குத் தானணிந்திருந்த நகைகள் (திருமங்கிலியந்தவிர) அனைத்தையுங் கொடுத்தாள் என்றும் வடகரைச் சரித்திரங் கூறுகின்றது.

கி. பி. 1891-ம வருடம் பெருமழையால் அருவி மிக வீங்கி, அதிக வெள்ளம பாய்ந்து அருகிலிருந்த காசிலிங்க சுவாமிகோயில் தெற்குவீதியில் செணபகவிநாயகர் கோயில் அழிககபபட்டன. வைத்தியப்ப விலாச மண்டபம், அருவிக் கரைபபாலம், கோயிலின் சிலபாகங்களுஞ் சேதமடைந்தன. அதிகபபொருள் செலவுசெய்து விநாயகர்கோயிலைத்திரும்பக் கட்டியும, இதர இடங்களை செமமைபபடுத்தியும ஒழுங்கு செய்தனர். காசிலிஙகசுவாமி கோயிலுக்கு எப்போதும வெள்ளத்தின அபாயம இருப்பதால் அதுகட்டப்படவில்லை. இந்த இலிங்கம அமமையாருடன் இப்போது சுவாமிகோயில் பிரகாரம சுபபிரமணியர் முன்னுலிருக்கின்றது.

தற்காலத்தில் தேவகோட்டை, வி. கரு. சித. சோமசுந்தரஞ்செட்டியார் அவாகளும், அவர்கள் குமாரர் காசிவிஸ்வநாதன் செட்டியாரவர்களும் திருப்பணி செய்ய அன்புடன் முன் வந்தாாகள். திருப்பணிக்காகத் தாம பணம் செலவழிப்பதாகவும், கோயிலார் வருடம ஒன்றுக்கு ரூபாய் 5000 கொடுதது வரவேணுமென்றும, 7 வருஷத்தில் திருபபணி முடிப்பதாயும கோயில் அதிகாரிகளுடன் ஒப்பந்தஞ்செய்து கொண்டனா அப்படியே தாங்கள் ஏராளமான பணம் செலவழித்தும, கோயிலாரிடம 7 வருடமாகப் பணங்கள் அவ்வபபோது பெற்றும், 1100-ம ஆண்டு தைமீ அம்மன் கோயில் திருப்பணி ஆரம்பித்து 1108-ம் ஆண்டு ஆனிமீ

முடித்துக் கும்பாபிஷேகமுஞ் செய்தனர். மிகவும் தணிவாயிருந்த குழல்வாய்மொழியம்மையார் கோயில் இப்போது உயரமாகவும் தற்கால நாகரிகத்துக்கேற்றவாறு நல்லகாற்றும் நல்ல வெளிச்சமும கோயிலுட்புகும்படியாயும், 1000 மக்கள் ஏககாலத்தில் நின்று அமமையாரை வழிபடுவதற்குரிய முறையிலும் கட்டிமுடிக்கப்பட்டிருக்கிறது. கர்ப்பக்கிரகம, அர்த்த மண்டபம், பள்ளியறைகளின் தளம், முன் மண்டபத்தின் தளத்தைவிட உயர்த்திக் கட்டப்பட்டிருப்பதால் யாவரும அம்மையாரை நன்ருய்க் காணலாம. இம்மண்டபங்கள் பளிங்குபோல் இழைத்த கருங்கல்லால் ஆக்கப்பட்டு பார்க்க அழகாக விளங்குகின்றன. இவ்வரிய வேலைப்பாடு சேதப்படாதபடி சுற்றிலும பித்தளைக் கம்பிகளால் அளியிடப் பட்டிருக்கிறது. உட்கதவுகள், பள்ளியறைக்கதவுகள், சப்பர மஞ்சம முதலியன அருமையான வேலைப்பாடுள்ள வெள்ளித் தகடுகளால் பொதியப்பட்டு கண்கவருந் தோற்றமளிக கின்றன. கர்ப்பக்கிரகத்தின் மேலே பல நிறங்கள் தீட்டிய ஒரு சிறிய கோபுரமும் கட்டியிருக்கிருர்கள். இத்திருப்பணியால் அமைந்த கட்டட மாறுபாடுகளெல்லாம் கோயிலின் உண்மைத் தத்துவங்கள், ஆகம விதிகளுக்கு உகந்தனவா வென்பது ஆழ்ந்த ஐயப்பாடு.

இத்திருப்பணியாளராகிய சோமசுந்தரஞ் செட்டியார் அவர்கள் மனைவி இலக்குமி ஆச்சியார் குற்ருலநாதருக்கும் அம்மையாருக்கும் வெள்ளியினுல் நிலையங்கி திருக்குவளை பீடம பிரபை முதலியன செய்து கொடுத்திருக்கின்றனர். கோயில் முற்றமும் முற்றத்துக்குவரும் வழியும் சிமின்ற் வேலை செய்யப்பட்டிருக்கின்றன. சந்நிதித்தெரு சிமின்ற் வேலை செய்து இருபக்கமும் கற்கள் பாவியிருக்கின்றன. ரூபாய் 10000 செலவு செய்து கோயில் முழுவதும் மின்சார

விளக்குகள் அமைத்தும், திரிகூடமண்டபத்தின் கல் தள வரிசை ரூபாய் 6000 செலவில் புதுப்பிக்கப்பட்டும், திருப் பணிகள் நடத்தப்பட்டிருக்கின்றன. ப சு ப் பி ரை ர கட்டு வதற்குத் திருப்பூர் திரு. K. பெருமாள் செட்டியார் அவர்கள் ரூ. 1500 கோயிலார்வசம் உதவ பிரையும் கட்டி பின்பு கோயிலார் செலவில் விரிவாய் கட்டப்பட்டிருக்கிறது. கோயிலின் ஈசானதிக்கில் ஒரு அழகிய நந்தவனம் அமைக்கப்பட்டிருக்கிறது. இதற்கு ஷெண்பகப் பூங்கா என்று பெயர். 4—5—50ல் கர்ப்பக்கிரக விமானத்திலுள்ள ஸ்தூபியும் முன்கோபுரத்திலுள்ள ஸ்தூபிகளும் புதுப்பிக் கப்பெற்றன. இப்போது சுவாமி கோயில் அம்மன் கோயில் கோபுரங்கள் திருத்தியமைக்கத் திட்டமிட்டு சுவாமிகோயில் அம்மன் கோயில் கோபுர வேலை நடந்து வருகின்றது. திருக்குற்றாலப்பதிகம், குறும்பலாப்பதிகம், திருஅங்கமாலை மூன்றையும் சலவைக்கற்களில் பொறித்து அம்மன்கோயில் தெற்குச்சுவரில் பதித்திருக்கின்றது. இவ்வருமைப்பணியை வள்ளன்மையே உருவாகிய திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீ காசிவாசி அருணந்தி தம்பிரான் சுவாமியவர்கள் தங்கள் செலவிலேயே செய்து கொடுத்தார்கள். தவிர திருமுறைக் கோயிலுக்கும் படிப்பகத்திற்கும் 100 புத்தகங்கள் ஈந்தார் கள். ரூபாய் 25600 முதலீடாக வைத்து திருக்குற்றால நாதர் தேவாரநிதியாக நிறுவி மாதம் ரூ. 60-ல் ஓர் ஓதுவார் நியமித்து அவர் காலை மாலை கோயிலில் திருமுறை ஓதும்படி அரியபணி செய்திருக்கின்றனர். இதின் தொடர்ச்சியாக தேவார பாடசாலையொன்று நடந்து வருகின்றது. தலப் பதிகங்கள் 2 திருஅங்கமாலை, சிவபுராணம், திருவெம்பாவை முதலிய திருப்பாக்களை செப்புஏட்டில் எழுதித் தந்திருக்கின் றனர். இவ்வேடுகளை திருமுறைக் கோயிலில் வைத்து வழி

பாடு செய்கின்றார்கள். பராசக்தி கோயில் முன்பு தர்மபுர ஆதீன கர்த்தரவர்கள் அளிபோட்டும 'ஓம்சக்தி' யென ஓர் மின்சார விளககமைத்தும் கொடுத்திருக்கின்றார்கள். சைவத்தின் பரம ஆசாரியர்களும தலைவர்களுமாகிய உயர்தவச செமமுனிவாகட்கு கோயிலார் தாழ்ந்த வணக்கம் உரித்தாகின்றது.

## சிற்பம்

வடக்குவாயிற் கதவுகளில் சிவபெருமான் திருமால் முதலானோர் திருவிளையாடல்களையும வெவ்வேறு உருவத் தோற்றங்களையும செதுக்கியிருககின்றது. நமஸ்கார மண் டபம் கொடிமரமுள்ள முன்மணடபததில் இரண்டு பக்கங் களிலும் தூண்களுக்குமேல் பல காட்சிகள் செதுக்கப்பட் டிருக்கின்றன. பரவை நாசசியார், சங்கிலி நாசசியாாகளின் பித்தளை உருவங்கள் பண்டைக்கால நகைகள் அணிந்து கைகளிற் றிருவிளக்கேந்தி நிற்குங் காட்சி தமிழமக்களின் பழைய நாகரிகத்தை விளக்கிக்காட்டும். நடராசப்பெருமான் திருவுருவம் சிற்பக்கலையின் சிகரம். குனித்த புருவமும் கொவவைச் செவ்வாயும, குமிண்சிரிப்பும, பனித்தசடையும, பவளமபோல் மேனியிற் பால் வெண்ணீறும, ஒருகையிற் றுடியும், ஒரு கையில் அனலும், குஞ்சித பொறபாதமும காணப்பெற்றால் வேறு பேறும வேண்டுமோ! பக்கத்தில் பிரியாதுநிற்கும இறைவியை அருளுடன் ஒரு கண் நோக்கி ஆடலும், மணிவாசகர் துதிப்பதும், காரைக்காலம்மையார் அவனடியின் கீழிருநது மகிழ்வதும மனதைக் கரைக்கும். என்ன அரிய காடசி' சித்திரசபையில் இறைவனின் பல திரு உருவங்களும், திருவிளையாடல்களும் ஓவியமாகப் பல நிற வனப்புடன் வரைந்திருப்பது உயர்ந்த கலைத்திறமையைக்

காட்டும். வெளி மண்டபத்திலுள்ள 4 கற்சிலைகள் வெகு திறமையுடன் ஆக்கப்பட்டு உயிர் ததும்பி நம்முடன் பேசுவனபோலத் தோன்றும். இச்சபையிலுள்ள ஓவியங்கள் காலத்தின் காரணத்தால் மங்க ஆரம்பித்தன. ஓவியங்களனைத்தையும் புதுப்பிக்கும் நோக்குடன் வேலை ஆரம்பமாயிருக்கிறது.

## பூசைகள், விழாக்கள்

திருக்குற்றாலநாதருக்கு மகுடாகமப்படி பூசை நடந்து வருகின்றது. இதன்படி முதலில் விநாயகருக்கு வழிபாடும், பின்னர் நடராசப் பெருமானுக்கு ஆராதனையும் நடக்கும். இதற்குப் பின்பே திருக்குற்றாலநாதருக்கும் குழல்வாய் மொழியம்மைக்கும் ஆராதனை நடத்தப்படும். அன்றாடகம் திருவனந்தல் (காலை 5 மணி), உதயமார்த்தாண்டம் (காலை 6 மணி), விழா பூசை (காலை 7 மணி), சிறு காலசந்தி (காலை 9 மணி), காலசந்தி (காலை 10 மணி), உச்சிக்காலம் (மதியம் 12 மணி), சாயரக்ஷை (மாலை 6 மணி), அர்த்தசாமம் (இரவு 9 மணி), ஏகாந்தம் (இரவு 9 15 மணி) என 9 காலங்கள் உண்டு. சித்திரைவிசுவிழா, ஐப்பசிவிசு விழா, திருவாதிரை விழாவென மூன்றுவிழாக்கள் ஆண்டில்நடைபெறும். விழாக் காலத்தில் சித்திரசபையைச்சுற்றி இறைவன் இறைவி உலா வருவார்கள். 5-ம் திருநாள் தேரவிழா நடக்கும். சித்திரை மாதம் வசந்தவிழாவும், புரட்டாசிமாதம் நவராத்திரிவிழாவும் ஐப்பசிமாதம் கந்தசஷ்டி விழாவும், கார்த்திகை மாதம் சுக்ல பக்ஷம் அஷ்டமி திதியில் பவித்ரஉற்சவமும் கொண்டாடப் படும். தரணி பீடமாகிய பராசக்தி பீடத்துக்கு ஒவ்வொரு பௌர்ணமியிலும் சிறப்பான வழிபாடு நடக்கும். சித்திரை, ஐப்பசிவிசு விழாக்களிலும், தைமாதம் மக நட்சத்திரத்தில் நடக்கும் தெப்பவிழாவிலும், திருவிலஞ்சிக் குமாரர் தன்

இரு தேவியருடன் இங்கு வந்து குற்றாலநாதருடன் கலந்து கொள்வது வழக்கம். பெருவிழாக்கள் முடிந்ததும், தந்தை குற்றாலநாதர் தமது திருமகனார் குமாரருக்கும், அவர் தேவி யாருக்கும் பவுன், பட்டாடை அன்புடன் அளிப்பதும், குமாரர் தந்தையை வலம் வந்து தாழ்ந்து அவற்றை ஏற்று விடை பெறுவதும் காண்பவர் மனதை உருக்கும் ஓர் அரிய காட்சி. விழாக்காலங்களில் உலா முடிந்ததும் திருக்குற்றாலம் சன்னதி பிரபந்த வித்துவான் மேலகரம் மகாகவி திரிகூட ராசப்பக் கவிராயர் அவர்கள் பரம்பரையார் வாகனக் கவி பாடுவார்கள் இவர்களுக்குக் கோயில் மரியாதைகள் இன்றும் உண்டு. உயர்ந்த நாயன வாத்தியங்கள், இன்னிசைக் கச்சேரி கள், வேதபாராயணம், திருமுறை ஓதுதல் முதலியன சிறப் பாக நடத்தப்படும். அறிஞர்களைக்கொண்டு தமிழ், சமயம் முதலிய பொருள்கள்பற்றி அரிய சொற்பொழிவுகள் நிகழ்த்திவைப்பார்கள். "சாறெலாம் வளர்க்கும் வீதி தமிழெலாம் வளர்க்கும் மன்றம்" என்று தலபுராணம் விழாச் சிறப்பினையும், மொழியைப் பேணும் பான்மையையும் சிறப் பிக்கின்றது. விழாக்காலங்களில் தீப ஆராதனை முடிந்ததும் வேதபாராயணம் மந்திரபுஷ்பம் ஆனவுடன் திருமுறை ஓதப் படும். இதற்குப்பின்பே ஆசீர்வாதம் கூறப்படும். இம் முறை முதன் முதல் இக்கோயிலிலேயே ஆரம்பிக்கப் பட்டது.

## வழிபட்டவர்கள்

அகத்தியனார் சிவபிரானை வழிபட்ட வரலாறு முன் கூறப்பட்டது. கடைச்சங்கப் புலவராகிய கபிலரும் வந்து வழிபட்டிருக்கின்றார். திருஞானசம்பந்தர், மதுரைக் கூன் பாண்டிய அரசனுக்கு வெப்புநோய் தீர்த்துச் சமணத்தை யழித்தபின், பாண்டிநாட்டுத் தலங்களை வழிபட விரும்பி

வழியில் இங்கு வந்து பதிகம் பாடி இறைவனை வழுத்தினார். இவர் கூடவே கூன் நீங்கப்பெற்று நின்றசீர் நெடுமாறனென்று விளங்கிய பாண்டிய அரசனும், தமிழ்நாடுற்ற சமணை இடர்நீக்கித் திருநீறு பரப்பிச் சைவம் வளர்த்த தன் மனைவி பாண்டிமாதேவியாகிய மங்கையர்க்கரசியாரும் தங்கள் அமைச்சர் குலச்சிறையாரும் இங்கே வந்து வழிபட்டிருக்கின்றனர். சுந்தரமூர்த்தியுடன் சேரர் பெருமானும் வந்து தரிசித்துப் போயிருக்கின்றனர். மாணிக்கவாசகர் குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தனைக் கண்ணாரக் கண்டு கற்றாவின் மனம்போலக் கசிந்து உருகினார். திருவெண்காடர் என்ற பட்டினத்தடிகள், அருணகிரியார் முதலியோரும் வந்து வணங்கி மனங்கனிந்து பாடியிருக்கின்றார்கள். திருநாவுக்கரசரும் வந்து வழிபட்டிருக்கலாம். சான்றில்லை.

1126-ம் ஆண்டு மார்கழி மாதம் 7உ (22—12—50) திருவாவடுதுறை ஆதீனம் 20-வதுபட்டம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாணதேசிக பரமாசாரிய சுவாமிகள் தமது திருக்கூட்டத்தாருடன் திருக்கோயிலுக்கு வந்து திரிகூடநாதருக்கு மஹாருத்ராபிஷேகம் நடத்தி வழிபாடு செய்தனர். தர்மபுரம், திருப்பனந்தாள் பரமாசாரிய சுவாமிகள் அடிக்கடி வந்து விஷேட வழிபாடு செய்து தாமும் மகிழ்ந்து மக்களையும் மகிழ்விப்பதுண்டு. 1957-ம் ஆண்டு கடைசியில் சிருங்கேரி ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளும் வந்து வழிபாடு செய்தனர்.

## வழிபடு பயன்

வடவருவியிற் குளிப்பவர் பாவங்கள் கழுநீராய் ஓடுமென்றும் இக்கோயிலில் இன்னகாலங்களில் இன்ன கடவுள்களை இன்ன முறையில் வழிபட்டால் இன்ன பயன் கிட்டுமென்றுந் தலபுராணம் விளக்கமாய்க் கூறும். "பாவப்பறை

யும்", "தீவினைகள் போயகல நல்வினைகள் தளரா" என ஞானசம்பந்தரும், நம்புயிரா போகுபொழுது குற்றாலத் துறை கூத்தனல்லால் வேறு உற்றாரில்லையென்று வாகீசருங் கூறியிருக்கின்றனர்.

## சொத்து விபரம்

நன்செய், புன்செய் நிலங்கள் சுமார் 300 ஏக்கா இருக்கின்றன. பெறுமானம் சுமார் ரூ. 6 லட்சம. சுமார் ரூ. 100000 பெறுமான கட்டிடங்களும் கடைகளும உண்டு. 50000 ரூபாய் பெறுமான திருவாபரணங்கள் உண்டு வெள்ளிச் சாமான்கள் 10000 ரூபாய் பெறுமானவை. சுவாமி அமமன் வெள்ளிசசப்பரம 1. வெள்ளி இடபவாகனம 2 சுபபிரமணியர் வெள்ளி மயில் வாகனம் 1. வெள்ளி பிரதோஷ வாகனம் 1. நடராஜர் வெள்ளிசசப்பரம் 1. வெள்ளி பெருசசாளி 1. ஆக அருமையான வேலைப்பாடுள்ள 7 வெள்ளி வாகனங்கள் மதிப்பு ரூபாய் 35,000. தந்தப் பல்லக்கு, மரவாகனங்கள் (தேர் உள்பட), திருமுட்டுகள். எடுபிடிகள், குத்துவிளககுகள், சரவிளக்குகள், இரும்புச் சாமான்கள் தளவாடங்கள் ரூபாய் 25,000 பெறுமானவை. (சரவிளககுகள் ஏற்றியிருப்பது தங்க நக்ஷத்திரங்கள் பூத்து மினுங்கிககொண்டிருப்பது போலிருக்கும். அவை சிறுகாற்றில் ஆடிக்கொண்டிருப்பது கண்கவருங்காட்சி.) ஆக மொத்தமதிப்பு ரூபாய் 820000

## ஆண்டு வருமானம், செலவுகள் (சுமார்)
### (1366-ம் பசலி)

வரவு

| | | | | |
|---|---|---|---|---|
| நிலவருமானம் | சுமாா ரூ. | 57400 | 0 | 0 |
| கட்டிடங்கள், கடைகள், குடிக்கூலி | ,, | 24800 | 0 | 0 |
| அரசாங்கத்தார் உபயப்பணம் | ,, | 2500 | 0 | 0 |
| உண்டியல், காணிக்கை வகையறு | ,, | 4100 | 0 | 0 |
| வட்டி | ,, | 18000 | 0 | 0 |
| பலவகை | ,, | 6500 | 0 | 0 |
| ஆக வரவு | ,, | 113300 | 0 | 0 |

## ( 1366-ம் பசலி )

### செலவு

| | | | | |
|---|---|---|---|---|
| நித்திய பூஜைகள் | சுமார் ரூ. | 10500 | 0 | 0 |
| நைமித்திகங்கள் | ,, | 10100 | 0 | 0 |
| சிப்பந்தி வகையரா | ,, | 20300 | 0 | 0 |
| இறைவரி | ,, | 3600 | 0 | 0 |
| நிலம் பழுது பார்க்க | ,, | 1600 | 0 | 0 |
| கட்டிடம் பழுது பார்க்க | ,, | 2200 | 0 | 0 |
| வாகனாதியாபரணம் | ,, | 800 | 0 | 0 |
| பஞ்சாயத்து தீர்வை (கட்டிடங்களுக்கு) | , | 2815 | 0 | 0 |
| அறநிலையப் பாதுகாப்புக் கழகக் கட்டணம் (H. R. E Board) | ,, | 5000 | 0 | 0 |
| கணக்குப் பரிசீலனை | ,, | 1500 | 0 | 0 |
| வழக்கு முதலிய செலவு | ,, | 2800 | 0 | 0 |
| நானாவிதச் செலவு | , | 275 | 0 | 0 |
| சுகாதாரம் | ,, | 1700 | 0 | 0 |
| கல்வி, சமயம் முதலி செலவு | ,, | 2100 | 0 | 0 |
| விசேடச் செலவு | ,, | 1700 | 0 | 0 |
| கட்டிடங்கள் கட்ட | ,, | 22300 | 0 | 0 |
| கால்நடை செலவு | ,, | 2100 | 0 | 0 |
| ஆக மொத்தம் | ,, | 91390 | 0 | 0 |

அறநிலையக் கழகத்தின் திட்டப்படி வருவாயில் ஒரு பாகம் சேமநிதியாக ஒதுக்கி வைக்கப்படுகிறது.

## கட்டளைகள்

ஒவ்வொரு கால பூசைக்கும் தனித்தனியே கட்டளைகள் இருக்கின்றன. இவற்றுள் திருவாங்கூர் மகாராஜா அவர்கள் உதயமார்த்தாண்ட பூசை, நமஸ்காரம், ருத்ரசெபம், விழா பூசை முதலிய கட்டளைகள் ஏற்படுத்தி யிருக்கின்றனர். இவைகளுக்கு வேறு உபயங்களுமுண்டு. திருவாவடுதுறை மடத்தார் கட்டளை, பந்தளராஜா கட்டளை, திருநெல்வேலி மேடைதளவாய் முதலியாரவர்கள் கட்டளை, திருநெல்வேலி பிள்ளையனவர்கள் கட்டளை, சொக்கன்பட்டியார் கட்டளை, முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவை, மாதச் சிறப்புகளுக்கும் விழாக்களுக்கும் சில கட்டளைகள் ஏற்பட்டிருக்கின்றன. கட்டளைக்காரரிடமிருந்து வருடம் ஒன்றுக்கு மொத்தம் சுமார் ரூபாய் 5000 கோயிலுக்கு வந்து செலவழிக்கப்படுகிறது. கட்டளைச் சொத்துக்கள் கோயிலார் ஆளுகையில் இல்லை. திரிகூடநாதர் திருப்பணி செய்த அன்பர்கள் கட்டளைகள் அளித்த அன்பர்கள் பலரையும் குறவஞ்சி நூல், 80-83 பாக்களில் ஒருவாறு தொகுத்துக் கூறுகின்றது.

சாலிவாகன சகாப்தம் 1676 க்குச் சரியான கி. பி. 1754 ம் வருடம் திருநெல்வேலி ஜில்லா சைவ வெள்ளாளப் பிள்ளைமார்கள், குற்றாலநாதர் சாயங்காலப்பூசைக்கு ஒரு வரி ஏற்படுத்தி ஒழுங்காய்க்கொடுக்கவேண்டுமென்று கட்டுப்பாடு செய்துகொண்டார்கள். இந்தவரியைத்திருவாவடுதுறைமடம் அதிகாரிகள் வசூலித்துக்கொடுப்பதாய் ஒப்புக்கொண்டிருந்தனர் என்று சூவெல்துரை சேகரித்த கல்வெட்டுகள் வெளியீடுகளிலிருந்து தெரிகிறது. Sewel's Topographical list of Inscriptions of the Madras Presidency edited by V. Rangachari M. A., L. T., 1431-ம் பக்கம் பார்க்க.

## அர்ச்சனை வகையரு

அஷ்டோத்திர அர்ச்சனை அணு 2. திரிசதம் அணு 3. சகத்திரநாமம் அணு 6. சர்க்கரைப்பொங்கல் ஒரு கட்டி அணு 4. பொங்கல் ஒரு கட்டி அணு 4. புளியோதனம் ஒரு கட்டி அணு 4. சுத்தன்னம் ஒருகட்டி அணு 3. பால்பாயசம் கால்படி அணு 6. நெய்அப்பம் ஒன்று அணு 1. நெய் வடை ஒன்று அணு 1. தேங்குழல் ஒன்று அணு 1. அபிடேகப் பால் ஒரு படி ரூபாய் 1. பன்னீர் ஒரு குப்பி அணு 8.

## குற்ருலக்கோயில் நிர்வாகம்

இக்கோயில், சென்னை அறநிலையப் பாதுகாப்புக் கமிஷனரின் ஆட்சிகுட்பட்டது. இசசட்டத்திற்கு முன்னும், பின் சில ஆண்டுகளும் திருநெல்வேலி ஜில்லாச் சிவ தேவஸ்தானக கமிட்டி ஆளுகையிலிருந்துவந்தது. அப்போது இக் கோயிலுக்கு ஒரே காலத்தில் 6 தர்மகர்த்தர்கள் கூட நியமனம் செய்யப்பட்டு வேலை பார்த்திருக்கின்றனர். கமிட்டி எடுபட்டபின் 1933.ம வருடம் ஒரு நிர்வாகத்திட்டம் ஏற் படுத்தப்பட்டு 1944ல் அந்தத்திட்டம் மாற்றியமைக்கப் பட்டது. இத்திட்டப்படி தற்காலம் தென்காசி அட்வகேட் திரு. ஆ. சி. ஷண்முகநயினுர் பிள்ளை பீ. ஏ., பீ. எல்., (ஆட்சித் தர்மகர்த்தராகவும்). ருக்மணியம்மாள்புரம் திரு. ஹி. நவநீதகிருஷ்ணமருதப்பபாண்டியன், தென்காசி திரு. தெ. பா. கு. சு. சங்கர முதலியார் தர்மகர்த்தர்களாகவும் நியமிக்கப்பட்டு நிர்வாகம் நடத்தி வருகின்றனர். மாதச் சம்பளம் ரூ. 200 வரை பெறும் ஒரு ஆணையாளரையும் ( Executive Officer ) நியமிக்கின்றனர். இப்போதுள்ள ஆணையாளர் திருவாளர் R. ராமையா நாயுடு பீ. ஏ.

## வழக்குகள்

1902-ம் வருடத்தில் திருநெல்வேலி சப்கோர்ட்டில் (O. S. 52. of 02. Sub Court, Tinnevelly) இக்கோயிலாருக்கும் அரசாங்கத்தாருக்கும் ஒரு பெரிய வழக்கு நடந்தது. 1898-ம் வருடம் அரசாங்கத்தாருடைய காட்டு இலாக்கா அதிகாரிகள் கோயிலுக்குத் தென்புறம அருவிக்குப்போகும் பாதையிலுள்ள பாலத்தின் அருகாமையில் ஒரு எல்லைக் கல்லை நாட்டினார்கள். தங்களுக்குச சொந்தமான இடத்தையும காட்டிலாகாவில் சேர்த்துவிட்டதாக கோயிலார் அரசாங்கத்தாருக்குப் பன்முறை எழுதியும பயனில்லாமல், இறுதியில் ஒரு வழக்குத் தொடர்ந்து, வடவருவிமலைக்கு வடக்கு, சிற்றருவி மலைக்குக் கிழக்கு, பிள்ளையன் கட்டளை மண்டபம் பூசைமடங்களுக்குத் தெற்கு, வடவருவி மலைக்கும பளியன் காட்டுக்கும் மேற்குமுள்ள இடம, தீர்த்தவாரி மண்டபம் சந்தியாவந்தனமண்டபம பூசைமடம், அருவிக்கரைப்பாலம் அருவியின் மாவடித்துறைப்பாதை,பொங்குமாகடல், அருவி விழுமிடம், தடாகம், ஓடைகள், மலைகள், மரங்கள் முதலியன கோயிலுக்குச் சர்வசுதந்தரமாகப் பாத்தியப்பட்டனவென்று வாதித்தனர். அரசாங்கத்தார் இதைமறுத்து கோயிலாருக்கு அவர்கள் சொல்லுகிறபடி விரிந்த பாத்தியதைகள் கிடையாதென்றும, கோயிலார் இநத இடங்களில் பரமபரை வழக்கப்படி செய்யும சுவாமி கைங்கரியங்களுக்கு ஊறுபாடு வருமுறையில் தாங்கள் நடந்துகொள்ளவில்லை யென்றும், எதிர்காலத்திலும இப்படியே நடந்து கோயிலார், பொதுமக்களின் மாமூல் பாதசியதைகளைக் காப்பாற்றத் தயாராயிருக்கிறார்களென்றும கட்சி கூறினார்கள். அசல் கோர்ட்டில் கோயிலாருக்குச சில அனுகூலங்கள் கிடைத்தன. இருதிறத்தாரும் சென்னை உயர்நீதி மன்றத்தில் (ஹைகோர்ட்டு)

விண்ணப்பிக்க (Appeal 146 & 153/06) கோயிலார் வியாச்சியமே தள்ளுபடியாகிவிட்டது. பின்பு லண்டன் சீமையில் மா. த. அரசருடைய பிரிவிக் கௌன்சிலுக்கு மறுவிண்ணப்பம் செய்ய (Privy Council appeal No. 88 of 1915) இருதிறத்தாரும் கீழ்க்கண்டவாறு தங்கள் கக்ஷிகளைச் சமாதான முறையில் முடித்துககொள்ளவும அதனை உறுதிசெய்து 8—8—17-ல் மன்னர்பிரான் உத்தரவு பிறப்பித்தார். 1. சிற்றாற்றுக்கு மேற்குப்பக்கம் தடாகத்துக்குக்கீழேயுள்ள இடம முழுமையும் சநதியாவந்தன மண்டபம், காசிலிங்க சுவாமியிருந்த இடம். கிழககுப்பக்கம் தீர்த்தவாரிமண்டபம இதன் தாழ்வாரங்கள் கோயிலுக்குப் பாத்தியப்பட்டவை, 2. அருவி, தாடகம், சுற்றியுள்ள இடங்களில் கோயிலார் பாரம்பரை வழக்கப்படி வழிபாடு செய்துகொள்ளவும், அவ்விடங்களுக்குப் போக வரவும் சுதந்தரம் உண்டு. 3. பொதுமக்கள் மாமூல்படி அனுபவிககிற சுதந்தரங்களையும், போக்குவரவு பாத்தியதைகளையும அரசாங்கத்தார் காப்பாற்றவேண்டியது. இவவிதமாக சுவாமி கைங்கரியங்களுக்கும், பொதுமக்கள் அநுபவத்திற்கும் இடையூறின்றி ஒரு நல்முடிவு வந்தது மெசசத்தக்கது.

## இலக்கியம்

கோயிலதிகாரிகள் ஹிந்து மக்களின் பொது நன்மைக்காக ஒரு புத்தகநிலையம கட்டுவித்து இலக்கணம், இலக்கியம் புராணம், சமயம், தத்துவம, ஆராய்ச்சி முதலிய நூல்கள் வாங்கி வைத்திருக்கின்றனர். நிலையத்தில் படிப்பவர்களுக்கு அவை இலவசவாய் வழங்கப்படும. செய்தித்தாள்களும் சமயப்பத்திரிகைகளும் வரவழைக்கப்படுகின்றன. இந்நிலையத்திலேயே விழாக் காலங்களிலுஞ் சாரற்காலங்களிலும் தமிழ், சமயம் சம்பந்தமான மகாநாடுகள், சொற்பொழிவுகள் நடத்தப்படுகின்றன.

## இத்தலத்தைப்பற்றிய நூல்கள்

*திருக்குற்றலத்திலிருந்து 2 மைலுக்குக்கிழக்கேயுள்ள மேலகரம் என்னுஞ் சிற்றூரிற் சுமார் 295 ஆண்டுகளுக்கு முன் பிறந்தவரும், தாயுமான சுவாமிகள் காலத்தவரும் அப்போது மதுரையை ஆண்ட மன்னர் முத்துவிஜயரங்க சொக்கலிங்க நாயக்கரிடம் கொல்லம் 891-ம் ஆண்டில்* (1718 A. D.) *திருக்குற்றலக் குறவஞ்சி யென்னும அரிய நூல் இயற்றியதற்காகத் திருககுற்றலக் கோயில் சன்னதி பிரபந்த வித்வான் என்ற பட்டமும, நன்செய் நிலமும் (குறவஞ்சி மேடு) இனுமாகப் பெற்றவருமான மகாகவி திரிகூடராசப்பக் கவிராயர் இயற்றிய நூல்கள் 14.*

1. ***திருக்குற்றலத் தலபுராணம்.*** 2072 *செய்யுட்களால் அமைக்கபபெற்றது. இலக்கியப் பண்பும, கற்பனை நயமும், பொருள்நலமும் நிரமபிக் கற்பவர்களை மகிழ்விப்பது, ஏனைய புராணங்களைப்போலல்லாது ஓர் தனிசசிறப்புடைய நூல் என்று இலக்கியப் புலவரனைவருங் கொள்கின்றனர்.*

***நான்காம் பதிப்பு:— ஸ்ரீ மீனுக்ஷி அச்சுக்கூடம், தென்காசி.***

(1) திங்கள் சூடிய தேவன் ஒருவனே
பொஙகுபல சமயப் பொருளா தல்போல்
அஙகஙகே பகுத தாயிரமா முகக
கஙகை போனறது சித்திர கங்கையே.

(2) புவன கோடியைப் போக்கு வரவெனும்
கவன ஊசலிட்டு ஆட்டும கவுரியை
பவன வானவா தசசன பணிததோர்
கவனயாமலித் தொட்டிலிட்டாட்டினர்.

**2. திருக்குற்றுலக் குறவஞ்சி.** ஒரு இணையற்ற நூல். இதயம் அனுபவித்த ரசங்களை இசையிலும், தாளத்திலும் வைத்து உலக வழக்கோடு ஒட்டிப் பாடிய நூல். மிகவும் அனுபவிக்கக்கூடியது. திருக்குற்றுலக் குறவஞ்சியைப்போல் ஒரு குறவஞ்சியும், முக்கூடற் பள்ளுப்போல் ஒரு பள்ளும், வருணகுலாதித்தன் மடல்போல் ஒருமடலும் கிடையாதென்பது கல்வி உலகவழக்கு. நகைச்சுவையும் பக்திரசமும கலந்து படிப்பவர்களைப் களிப்பிக்கும். இந்த நூல் நடனக் கலைக்கும் இசைக்கலைக்கும் மிகப் பொருத்தமென்பது கலைஞா முடிவு. சென்னை அடையாறு கலாக்ஷேத்திரத்தின் ஸ்தாபகரும போஷகருமான ருக்மணி அருண்டேல் அம்மையார் 5—3—51 சிவராத்திரியன்று இத்தலம் வந்து வழிபாடு செய்து இரவு தன் கோஷ்டியாருடன் கோயில் முன் அமைக்கப்பட்ட ஒரு சிஙகார மேடையில் இக்குறவஞ்சி நாடகத்தை அபிநயபாவங்கள் வழுவாமல் சிறந்த முறையில் வெகு திறமையுடன் ஆடிக் காண்பித்தனா. இககுறவஞ்சி நூல் இயற்றியபின் இநத நாடகத்தை இக்கோயிலில் ஆடிக்காண்பித்தது இதுவே முதற்றடவையென்று தெரிகிறது. இந்த ஆட்டத்தால் குறவஞ்சி நாடகத்தின் அருமையையும இனிமையையும் நன்றாய் அனுபவிக்க முடிந்தது.

கைககரும்பென்ன கணையென்ன நீயென்ன மன்மதா - இந்தச்
செககரும்பாவி நிலாவுமே போதாதோ மன்மதா
மைககருஙகண்ணு ளிரதிகும் மால்கொண்ட மன்மதா - விடை
வலலாருககு மால்கொண்டாற் பொல்லாப்பென் மேலுண்
டோ மன்மதா.

——

சாட்டிநிற்கும் அண்டமெல்லாஞ சாட்டையிலாப் பம்பரம்போல்
ஆட்டுவிககுங குற்றுலத் தணணலார்.

**நான்காம் பதிப்பு:—** ஸ்ரீ மீனுக்ஷி அச்சுக்கூடம், தென்காசி.
(6, 7 உள்பட)

**3. திருக்குற்ருலயமகவந்தாதி.** *பல புராணக் கருத்துக்களைத் திரட்டிக் குற்ருலக் குழகனைப் புகழும் நூல்.*

விப்பிரசஙகந தமிழ்வாணர் சங்கம விராவுறுகல்
விப்பிரசங்கம பெறுமுணாவிர் சஙக வீதியினமே
விப்பிரசங கமழ்கொனறை யநதாமனை மெயயனைச்சே
விப்பிரசங கதப்பொய்யாம் பிறப்பை விடுவதற்கே

**4. திருக்குற்ருலநாதர் உலா.** *இந்த உலா இத் தலத்தில் உள்ள திருக்குற்ருலநாதரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு தலப்பெருமை, சிவன்பெருமை, அகத்தியர் வரவு, திருமால் சிவபிரானுகுதல், திருவிழா, திருக்கோலம், அபிடேகம், ஆபரணம், உடன்வருவோர், வாத்தியம், சின்னம், குழாங்கள், நயமபடநவிலுமு. கண்ணிகள் 557, காப்புச் செய்யுள் 3, வாழ்த்துச் செய்யுள் 1 கொண்டது.*

பேதை சிறுபருவப் பெண்பிள்ளை பஞ்சரத்துப்
பாதை யறியாப் பசுங்கிள்ளை—கோதுதளிர்
ஓங்கும் பரம்பொருளா ருய்யான செணபகததின்
பூங்கொம்பி லாடறப் பொலந்தோகை—வாங்குசிலை
ஈட்டுநுதல் மூன்ரு மிளம்பிறைபோற காட்டியதிற
கோட்டு மிருள்போலுங குழலினுள—*நாட்டுக்குப்*
*பண்டென்ற செஞ்சொற் பதினெட்டோ*
*டின்னமுமொன் று*
*உண்டென் று காட்டு முரையினுள்*—வண்டுபோல்
அம்புபோல் வாட்போல் அடையாளம் பெற்றதல்லால்
வெம்புபோர் செய்யா விழியினுள்.

**5. திருக்குற்ருலச் சிலேடை வெண்பா.** *கோயிலார் வெளியிட்டிருக்கின்றனர். உரையுடன் டாக்டர் உ.வே. சாமிநாதய்யரவர்களும் வெளியிட்டிருக்கிருர்கள். புராணக் கதை வாயிலாய் இறைவனைப் புகழும் நூல்.*

மாணிழையார் செவ்வாயும் வண்சிலைதேர் வேடுவரும்
கோணிலவை நாணேற்றுங் குற்றாலம்—பேணிவரி
வண்டாடும் பாடலத்தன வானவனு மீனவனுங்
கொண்டாடும் பாடலத்தன் குன்று.

(3, 4, 5 *பதிப்பு:— லோகாம்பிகை அச்சுக்கூடம், தென்காசி)*

**6. திருக்குற்றால மாலை.** *கோயிலார் வெளியிட்டிருக்கின்றனர். பக்தியைக் கிளப்பும அருமையான நூல். பாடல்கள் எளிய நடையிலுள்ளன.*

தடுககும் பொழுதி லணுவள வேனுந் தடுத்துக கொள்வாய்
கொடுககும பொழுதிலெலலாங் கொடுப்பாய திருக்கூத்துக்குநீ
எடுககுஞ சொரூபஙக ளாரறிவா ரெனையாள் புலிததோல்
உடுககுஞ சதானந்த யோகி குற்றாலத் துறை பவனே.

**7. திருக்குற்றால ஊடல்.** *கோயிலார் வெளியிட்டிருககின்றனா. 20 பாடல்கள் கொண்ட நகைச்சுவையுள்ள ஒரு சிறிய நூல். இறைவியும் இறைவனும் ஒருவரையொருவர் குறைகூறி எள்ளி நகையாடி விளையாடுகின்றனர். புராணக் குறிப்புகள் வாயிலாக இறைவன் இறைவி தன்மைகளைச் சித்தரிககும் நூல்*

*வினா:-* *இறைவி*

மாற்றுவெள்ளை மலையிலொரு பவளமலை
கொலுவிருககு மகிமைபோல
வேற்றுவெள்ளை விடைமீதிற் காட்சிதருங்
குற்றாலத் தெந்தையாரே

யாற்றுவெள்ளை சடையிருக்கக் கீற்றுவெள்ளை
மதியிருக்க வதிகமாநீர்
நேற்றுவெள்ளை சாத்தினதை யின்றுசிவப்.
பானகண்ணு னிறுத்தினீரே.

*விடை:-* *இறைவன்*

நிறுத்திநாம் பிரிந்ததில்லை நீபிரிந்து
பனிவரைக்கே நிற்குநாளிற்
பொறுத்துநாம் வடவாலின் கீழிருந்தோ
மதுதனக்குப் பொறுப்பில்லாமற்
சிறுத்துநாண் மலர்தூவிக கறுத்துவந்த
சேவகனைச் சிவந்தபோது
குறித்துநாம் பார்த்தவிழி சிவப்பன்றே
குழன்மொழிப் பூங்கொடியன்னளே.

**8. திருக்குற்ருலக்கோவை.** *செம்பாகமான நடையில் சொல்நயம், பொருள் நயம் நிரம்பிய நூல். 58 பாக்கள் கிடைத்தன. கோயிலார் வெளியிட்டிருக்கின்றனர்.*

*9. திருக்குற்ருலப் பரம்பொருள் மாலை: கோயிலார் வெளியிட்டிருக்கின்றனர் 10. குழல்வாய் மொழி கலிப்பா; 11. கோமளமாலை; 12. வெண்பாவந்தாதி; 13. பிள்ளைத்தமிழ்; 14. நன்னகர் வெண்பா.*

*இவைகள் வெளியிடப்படவில்லை. பிரதிகள் கிடைக்கவில்லை.*

*சித்திரசபைத் திருவிருத்தம். திருவாவடுதுறை ஆதீனத்துத் தொட்டிக்கலை மதுரகவி சுப்பிரமணியமுனிவர் இயற்றியது. தலபுராணப்பதிப்பில் சேர்க்கப்பட்டிருக்கிறது. திருவாவடுதுறை யாதீன மகாசந்நிதானங்கள் வருடாந்

தோறும் ஐப்பசி மாதத்திற் காலையில் காவேரிநதியில் நீராடி மீண்டுவருங்காலத்தில் இவ்விருத்தங்களை ஓதிவருவது வழக்கம்.

ஆயிரமுகக் கங்கை யலையெறிந் தாடமல
ராடகக் கொன்றை யாட
வரவாட வாலவெண் பிறையாட வெணடலைக
ளாட வெளளறுகு மாட
ஞாயிறுதயம்பொரு சடாமகுட மாடவளர்
நகைமுகக கருணை யாட
நாககுணடலமாட வதளாட வொருகையி
னுதவெண் டுடியு மாட
மேயவொரு கையிலெரி யாடிடவமைத் தொருகை
வீசியொருகை யாட வோர்
வீரவொண கழலாட வுயிாவர்கக மானநத
வெள்ளந் திளைத் தாடவே
சேயிதழச் சீறடிச சிவகாமி யம்மையிரு
இருநயன வண்டு மாடச்
சித்ரசபை தன்னிற் றிருச்சிலம் பொலிதரத்
திருநடம் புரி வரதனே.

குற்றால அந்தாதி. சொககன்பட்டிக் குறுநில மன்னர், சின்னணைஞ்சாத தேவரின் அமைச்சராகிய பிச்சப் பிள்ளை இயற்றியிருக்கின்றார். வெளிவரவில்லை.

குற்றாலக் கோவை. தாதம்பட்டி அருணாசல சுவாமிகள் இயற்றியதாக திருவிதாங்கூர் சர்வகலாசாலையார் வெளியிட்டிருக்கின்றனர். (1949)

**திருக்குற்றாலத்தல வரலாறு.** இக்கோயில் ஆட்சித் தர்மகர்த்தர் தென்காசி அட்வகேட் ஆ. சி. ஷண்முகநயினார் பிள்ளை பி. ஏ. பி. எல். எழுதியது. கோயிலைப்பற்றிய

வரலாறு விழாக்கள் பதிகங்கள் சிறப்புகள் இலக்கியங்கள் கல்வெட்டுகள், ஊரைப்பற்றிய பலவகைக் குறிப்புகள், சுருக்கமாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

கோயில் வெளியீடு விலை அணா 5.
ஸ்ரீ மீனாக்ஷி அச்சகம, தென்காசி.

வேறு இலக்கியங்கள். "பெரிய புராணம்" திருஞானசம்பந்தர் புராணம 886 ம பாட்டு, சேரமான்பெருமாள்நாயனார் புராணம 106, 107-ம பாட்டுகள், பட்டினத்தார் "திருவேகம்பமுடையார் அந்தாதி" 60-ம் பாட்டு. "முக்கூடற்பள்ளு" சில குறிப்புகள், கந்த புராணத்தில் அசுரகாண்டம், திருக்குற்றாலப் படலம முதலியன.

H. R. Pate's Tinnevelly Gazetteer, Vol. I (1917) P. 459-465, Vol II (1934) P. 309-311.

## பக்கத்திலுள்ள பிற தலங்கள்
## திருவிலஞ்சிக் குமாரர் கோயில்

திருக்குற்றாலத்திலிருந்து நேர் வடக்கே போகின்ற கற்பாதையில் 2 மைல தூரத்தில் நல்ல இயற்கைக்காட்சியின் மத்தியில் அமைந்துள்ளது அழகிய கோயில் மிகத்தொன்மையானது. அகத்தியமுனிவர் வழிபட்ட தலம் காசிபர்,கபிலர், துருவாசர் மூவருக்கும மடக்கநேர்ந்தது உண்மைக் கடவுள் சிவன்என உணர்த்திய தலம. அருணகிரியார் திருப்புகழ் 4 பாக்கள் உண்டு. மேலகரம, பண்டாரககவிராயா இயற்றிய "இலஞ்சி முருகன் உலா"வும இலஞ்சி புதுவீடு I. S. சுப்பிரமணிய பிள்ளை இயற்றிய "செவவேள்மாலை", சந்தப் பாக்களும் மற்றும் பிள்ளைத்தமிழ் முதலிய நூல்களும் உண்டு. குமாரர் பெயர் - வரதராஜக் குமாரர். வள்ளி

தெய்வானையுடன் காட்சியளிக்கின்றார். இறைவன் – இரு வாலுகநாயகன, இறைவி – குழல்வாய்மொழி. இக்குமரனைத் திருக்குற்றாலநாதருககுத் துவாரசுப்பிரமணியர் என்று கூறுவார்கள். திருக்குறறாலநாதரின் சித்திரை விசு, ஐப்பசி விசு விழாக்களில் குறறாலஞ்சென்று 10 நாட்களும தங்கி வருவார். தைமாதம தெப்ப விழாவிலும கலந்து கொள்வார்.

## திருமலை

வடமேற்கு 8மைல் தூரத்தில் பண்பொழியூருக்கருகில் நல்ல கற்பாதையுள்ள தலம். சுமார 400 அடி உயரமுள்ள குன்றின மேலுள்ளது. இங்கு எழுநதருளியிருப்பவர் பால சுப்பிரமணியா. ஐநதருவிப்பாதையில் நின்று பார்க்க இககோயில் செய்மையில் மேற்குத் தொடர்சசி மலைச்சாரலில் நன்கு தெரியும். செஙகோட்டை கவிராஜ பண்டாரத்தையா பாடிய பிள்ளைத் தமிழும நகரககிழாரென்னும் சங்கர பாண்டியன் பிள்ளை பாடிய 1008 வணணப் பாக்கள் கொண்ட "திருமலைக் குமாரசாமி திருப்புகழ", "கொமபில்லா வண்ணம", "கொமபில்லா வெண்பா அந்தாதி", "கொம்பில்லா நிரோட்ட வெண்பா அநதாதி", "மயில் விண்ணப்பம", "அலங்காரபஞ்சகம்" முதலிய நூல்களும் உண்டு, திருமலைக் குறவஞ்சியும, திருமலைப்பள்ளும பாடப்பட்டிருக்கின்றன. சுமார் 400 வருடஙகளுக்குட்பட்ட கோயில். பண்பொழி ாசானத்திக்கில் நகரீஸ்வரமுடையார் கோயில் இருக்கிறது. தை மாதத்தில திருமலை முருகன் இங்கே வந்து விழாக்கொள்வது வழககம.

## மேலகரம் ஷெணபக விநாயகர்.

தென்காசி - குற்றாலம பாதையில் மேலகரம் ஊரில் உள்ளது. இப்பிள்ளையாரைத் திருக்குற்றாலநாதருக்கு 'துவாரவிநாயகர் என்று சொல்லுவார்கள்.

## தென்காசி காசிவிசுவநாதர் கோயில்

ஷெண்பகமாற பாண்டிய அரசன் கொல்லம் ஆண்டு 424-ல் கட்டிய கோயில். இறைவன் பெயர்—காசிவிசுவநாதர். இறைவி—உலகம்மன் இக்கோயிலில் வியக்கத்தகுந்த வேலை நுணுக்கமும், புராணக்கருத்தைத்தழுவியுமுள்ள கற்சிலைகள் இருக்கின்றன. நடராஜர், காளி, திருமால், மன்மதன், ரதி வீரபத்திரர், பெண்டிர்களின் சிலைகள் கலைவல்லோர் பார்த்து அநுபவிக்கத் தகுந்தவை. அழகிய திருசசிற்றம்பல தேசிகர் இயற்றிய தலபுராணம உண்டு. இவ்வூரில் சகா. 1489-கி. பி. 1568-ல் அழகன்பெருமான் அதிவீரராமபாண்டியன் கட்டிய குலசேகரநாதர் கோயில், அரசாங்கத்தார் மருத்துவசசாலைக்குக் கீழ்பக்கம் உள்ளது. கீழப்புலியூர் ரயில்நிலையப்பக்கம் சிதம்பரேஸ்வரர் கோயிலிருக்கிறது. விககிரகங்கள் சிறப்புச் செறிவு கொண்டது. கல்வெட்டுகளும் உண்டு.

## முடிவுரை

ஒருதலத்தில் இறைவனை வழிபட விரும்புகின்றவர்கள் மூன்றுநாட்களுக்குக் குறையாமல் அத்தலத்தில் தங்கி வழிபடவேணுமென்று ஆன்ருேர்விதிசெய்திருக்கின்றனர். இது ஒருபுறமிருக்க, இறை வழிபாடின்றிப் பிற காரணத்தால் திருக்குற்ருலத்தைக்காணவருவாரையும் இங்குள்ளவனப்புக் காட்சியும், நிகரற்ற அருவியும், இன்பந்தருந் தென்றற் காற்றும், சந்தன மணக்குஞ் சாரல் மழையும், பிணியாளர் பிணிதீர, ஏனையோர் ஊக்கமுற, அறிவுத் தெளிவும், மன மகிழ்சசியும, உடல்நலமுமளித்து எவ்வளவுகாலம் தங்கினும் சலிப்பைத் தராமல், விருப்பைப் பெருக்கி வசிக்கச்செய்யும். ஆயின் இறைவழிபாடுகாரணமாக வருபவர்களுக்கு இதைவிட விருந்தகற்பயன்கள் கிட்டுமல்லவா? இறைவன், இறைவியையுங் கண்டு வழிபட்டு, மனதில் அமைதியும், வாழ்வில் ஒரு

இனிமையும் பெறலாம். இதுபற்றியன்ருே உமாபதி சிவாச்சாரியார் தன்னுடைய திருப்பதிகக் கோவையில் திருக்குற்ருலத்திற்குமட்டுந் தனிப்பெருமையாக "இன்புறுகுற்ருலம்" என்று ஏத்திஞர்! இப்படி உடல்நலம், மனநலம், வாழ்வு நலம், மறுமை நலம் ஒருங்கே வேறு எங்கு பெறமுடியும்? இறைவனே, தன் ஆடலின் இளைப்பைத் தீர்க்கத் தென்திசை நோக்கி முறையே ஆலங்காடு, தில்லை, மதுரை, நெல்வேலி முதலிய தலங்கள் சென்றும பலனெய்தாமல், இறுதியில் தென்றமிழைத் திருச்செவிமாநதித் தென்றலை நுகர்ந்து ஓவியமாக இயற்கையுடன் ஒன்றி நின்ருடி யருளியது இத் தலத்திலென்ருல் இதன் பெருமையைக கூறவும் இயலுமோ?

சுற்ருத வூர்தோறுஞ் சுறறவேணடாம புலவீர்
குறருல மென்ருெருகாற கூறிஞல்—வற்ரு
வடவருவியான மறுபிறவிச் சேற்றில்
நடவருவி யானே நமை.



## திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரம்

### திருக்குற்றாலப் பதிகம்

பண்—குறிஞ்சி
திருச்சிற்றம்பலம்

வம்பார் குன்றம் நீடுயர் சாரல் வளர்வேங்கைக்
கொம்பார் சோலைக் கோலவண் டியாழ்செய் குற்றாலம்
அம்பா னெய்யோ டாடலமர்ந்தான் அலர்கொன்றை
நம்பான் மேய நன்னகர் போலும் நமரங்காள் 1

பொடிகள்பூசித் தொண்டர்பின் செல்லப்புகழ்விம்மக்
கொடிகளோடு நாள்விழமல்கு குற்றாலம்
கடிகள்கொன்றை கூவிளமாலை காதல்செய்
அடிகண்மேய நன்னகர் போலும் அடியீர்காள் 2

செல்வமல்கு செண்பகம வேங்கை சென்றேறிக்
கொல்லை முல்லை மெல்லரும்பீனுங் குற்றாலம்
வில்லினொல்க மும்மதிலெய்து வினைபோக
நல்குநம்பானன்னகர் போலும் நமரங்காள் 3

பக்கம்வாழைப் பாய்கனியோடு பலவின்றேன்
கொக்கின் கோட்டுப்பைங்கனி தூங்கும் குற்றாலம்
அக்கும் பாம்பும் ஆமையும் பூண்டோர் அனலேந்தி
நக்கன்மேய நன்னகர் போலும் நமரங்காள். 4

மலையார் சாரல் மகவுடன் வந்த மடமந்தி
குலையார் வாழைத் தீங்கனி மாந்துங் குற்றாலம்
இலையார் சூல மேந்திய கையானெயிலெய்த
சிலையான் மேய நன்னகர்போலுஞ் சிறுதொண்டீர். 5

மைம்மாநீலக் கண்ணியர் சாரல் மணிவாரிக்
கொய்ம்மா ஏனலுண்கிளி யோப்புங் குற்றாலம்
கைம்மா வேழத் தீருரிபோர்த்த கடவுளெம
பெம்மான் மேய நன்னகர்போலும் பெரியீர்காள். 6

நீலநெய்தல் தண்சுனை சூழ்ந்த நீள்சோலைக்
கோலமஞ்ஞை பேடையோடாடுங் குற்றாலம்
காலன்றன்னைக் காலாற்காய்ந்த கடவுளெம
சூலபாணி நன்னகர் போலுந் தொழுவீர்காள். 7

போதும் பொன்னும உந்தியருவி புடைசூழக
கூதன்மாரி நுண்டுளி தூங்குங் குற்றாலம
மூதூரிலங்கை முட்டிய கோனைமிறை செய்த
நாதன்மேய நன்னகா போலும நமரங்காள். 8

அரவின் வாயின் முள்ளெயிறேய்ப்ப அரும்பீன்று
குரவம்பாவை முருகமா சோலைக குற்றாலம
பிரமனோடு மாலறியாத பெருமையெம
பரமன்மேய நன்னகா போலும பணிவீாகாள் 9

பெருந்தண்சாரல் வாழ்சிறை வண்டு பெடைபுல்கி
குருந்தம ஏறிச செவவழிபாடுங் குற்றாலம
இருந்துண்டேரு நின்றுண சமணும எடுத்தார்ப்ப
அருந்தண்மேய நன்னகா போலும அடியீாகாள். 10

மாடவீதி வருபுனற காழியாா மன்னன்
கோடலீன்று கொழுமுனை கூம்புங்குற்றாலம
நாடவல்ல நற்றமிழ் ஞான சம்பந்தன
பாடல்பத்தும பாட நம்பாவம பறையுமே. 11

திருச்சிற்றம்பலம்.

## திருக்குறும்பலாப் பதிகம்

*பண் - காந்தாரம்*
*திருச்சிற்றம்பலம்*

திருந்த மதிசூடித் தெண்ணீர் சடைக்கரந்து தேவிபாகம்
பொருந்திப் பொருந்தாத வேடத்தாற காடுறைதல புரிந்தசெல்வர்
இருந்தஇடம் வினவில் ஏலங கமழசோலே யினவண்டி யாழ்செய்
குருநதமண நாறுங குன்றிடஞ சூழ்தண் சாரற குறும்பலாவே. 1

நாட்பலவுஞ சோமதியஞ சூடிப்பொடியணிந்த நமபானம்மை
ஆட்பலவுந தானுடைய அமமானிடம் போலு மந்தண்சாரல்
கீட்பலவுந கீணடுகிளேகிளேயன் மநதிபாயந துண்டு விணட
கோட்பலவின்றீங கனியைமாக கடுவனுணடுகளுங் குறும்பலாவே. 2

வாடறறலே மாலேசூடிப் புலித்தோல் வலித்து வீககி
ஆடலரவசைத்த அம்மானிடம் போலுமந் தணசாரல்
பாடற்பெடைவணடு போதலாததத்தாதவிழநது பசும்பொனுந்திக
கேடன் மணங்கமழுங குன்றிடஞசூழ தணசாரறகுறும்பலாவே. 3

பால்வெண் மதிசூடிப் பாகத்தோா பெணகலநது பாடியாடிக
காலனுடல் கிழியக காய்ந்தாரிடமபோலுங கலசூழவெறபில
நீலமலர்ககுவளே கணடிறகக வணடரறறு நெடுநதணசாரல
கோலமட மஞ்ஞை பேடையோடாட்டயருங குறுமபலாவே. 4

தலேவாண மதியஙகதிர் விரியத்தண் புனலேத் தாஙகித்தேவி
முலேபாகங காதலிதத மூாததியிடம் போலு முதுவேய்சூழ்நத
மலேவாயசும்பு பசுமபொன கொழித் திழியு மலகுசாரல்
குலேவாழைத் தீங்கனியுமாஙகனியுந் தேன்பிலிறறுங குறும்பலாவே. 5

நீற்றேதுதைநதிலஙகுவெணணூலர் தணமதியர் நெறறிக்கணணர்
கூற்றேர் சிதையக கடிந்தாரிடம் போலுங் குளிர்சூழ் வெறபில்
ஏறறேன மேனமிவை யோடவைவிரவி யிழிபூஞசாரற
கோறறே னிசைமுரலக கேளாக குயில்பயிலுங குறும்பலாவே. 6

பொன்ருெத்த கொன்றையும் பிளளே மதியும் புனலுஞ்சூடிப்
பின்ருெத்த வாாசடையெமபெம்மானிடமபோலும் பிலயநதாஙகி
மன்றத்து மணமுழவ மோஙகிமணி கொழித்து வயிரமுநதி
குன்றத தருவியயலே புனலததுமபுங குறும்பலாவே. 7

ஏநதுதிணி திணடோளி ராவணனே மால்வரைக கீழடரவூன்றிச்
சாநதமென நீறணிநத சைவரிடம் போலுஞ்சாரற சாரல
பூநதணறுவேஙகைக கொத்திறுதது மநதகததிற பொலியவேநதிக்
கூநதற்பிடியுங களிறுமுடன வணஙகுங குறுமபலாவே 8

அரவினனேயானு நானமுகனுங காணபரிய வணணலசென்னி
விரவிமதியணிநத விகிாதாககிடம போலும விரிபூஞ்சாரல்
மரவமிருகரையு மல்லிகையுஞ் சணபகமு மலாநது மாநதக
குரவமுறுவலசெயயுங குனறிடஞ்சூழ தணசாரறு குறுமபலாவே. 9

மூடிய சீவரததா முனகூறுண டேறுதருமமு பினகூறுணடு
காடிதொடு சமணேக காயநதாரிடமபோலுங கலநழவெறிபில
நீடுயாவேயகுலியப் பாயகடுவனிள கழைமேலிருததஞ்செயயக
கூடியவேடுவாகள குயவிளியாககைமறிககுங குறுமபலாவே. 10

கொம்பாா பூஞ்சோலைக குறும்பலா மேவிய கொல்லேறறணணல்
நம்பானடிபரவு நானமறையான் ஞானசமபநதன சொனன
இனபாய பாடலிவை பததுமவல்லாா விருமபிககேட்பாா்
தமபால தீவினைகள போயகலு நலவினைகடளதளராவன்றே. 11

*திருசசிற்றமபலம.*

## திருநாவுக்கரசு சுவாமிகள் திருஅங்கமாலை

பண—சாதாரி

***உற்ருா ருளரோ—உயிர்***
***கொணடு போம் பொழுது***
***குற்ருலத்துறை கூத்தனல் லானமக்***
***குற்ரு ராருளரோ.***

## மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகம்

### திருப்புலம்பல்—சிவானந்த முதிர்வு

*உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்டே*
*கற்றாரை யான்வேண்டேன் கற்பனவு மினியமையுங் [ன்*
*குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாஉன் குரைகழற்கே*
*கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே.*

---

## மாணிக்கவாசக சுவாமிகள் திருக்கோவையார்

எழில்வா யிளவஞ்சியும் விரும்பும மாற்றிறை குறையுண்
டழல்வா யவிரொளி யம்பலத் தாடுமஞ சோதியந்நீங
குழல்வாய் மொழிமங்கை பஙகன் குறறாலத்துக கோலப்பிணடிப்
பொழில்வாய் தடவரை வாயல்ல திலலையிப் பூநதழையே 1.

வழியும் அதுஅன்னை யென்னின் மகிழும் வந்தெந்தையும் நின்
மொழியின் வழிநிறகுஞ சுறறமுன னேவய மம்பலத்துக
குழிஉம்ப ரேத்து மெயகூத்தன குற்றாலமுறறும் மறியக
கெழியுமம வேபனைதறோள் பலவென்னே கிளககினறதே. 2

---

## கபிலர் "சிவபெருமான் திருவந்தாதி"

80. *கோப்பாடி யோடாதே நெஞ்ச மொழிக்கூத்தன்*
*கோப்பாடிக் கோகரணங் குற்றாலங்—கோப்பாடிப்*
*பின்னைக்காய் நின்றார்க் கிடங்கொடுக்கும பேராளான்*
*பின்னைக்காம் எம்பெருமான் பேர்.* 1

84. *கூற்றும்பொருளும் போற்காட்டியென் கோல்வளையைக்*
*கூற்றின் பொருள்முயன்ற குற்றாலன்—கூற்றின்*
*செருக்கழியச் செற்ற சிவற்கடிமை நெஞ்சே*
*செருக்கழியா முன்னமே செய்.* 2

87. சூதொன் றுனக்கரியச் சொல்லினேன் நன்னெஞ்சே
சூதன் சொலற்கரிய சோதியான்— சூதின்
கொழுந்தேன் கமழ்சோலைக் குற்றாலம பாடிக்
கொழுந்தே இழநதேன் குருகு 3

---

## பட்டினத்தார் பாடல்

காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடைவாய் படுமுன்னே—மேல்விழுந்தே
உற்றார் அழுமுன்னே ஊரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு.

---

## அருணகிரிநாதர் திருப்புகழ்

வேதத்திற் கேள்வியிலாதது போதத்திற் காணவொணாதது
வீசத்திற் றூரமிலாதது கதியாளா
வீதித்துத் தேடரிதானது ஆதித்தற் காயவொணாதது
வேகத்துத் தீயில் வெகாதது சுடர்கானம்
வாதத்துக் கேயவியாதது காதத்திற் பூவியலானது
வாசத்திற் பேரொளி யானது மதமூறு
மாயத்திற் காயமதாசல தீதர்க்குத் தூரமதாகிய
வாழ்வைசசற் காரமதா இனி யருள்வாயே
காதத்திற் காயமதாகும தீதித்தித்தீதிது திதெனை
காதற்பட் டோதியு மேவிடு கதிகாணர்
காணப்பட் டேகொடு நோய்கொடு வாதைப்பட் டேமதிதீதக
லாமற்கெட் டேதடு மாறிட அடுவோனே
கோதைப்பித் தாயொருவேடுவ ரூபைப்பெற்றேவனவேடுவர்
கூடத்துக் கேகுடி யாய்வரு புருகோனே
கோதிப்பத் தாரொடுமாதவ சீலச்சித் தாதியர் சூழ்தரு
கோலக்குற் றாலமு லாவிய பெருமாளே.

---

## திருக்குற்றாலத் தலபுராணம்

*கங்கை வார்சடை யோகீ நமோநம*
*கஞ்சன் மாலறி யாதாய் நமோநம*
*மங்கை யாமளா பாகா நமோநம*
*மந்த்ர ஞான சொரூபா நமோநம*
*சங்கவீதி விலாசா நமோநம*
*சமபுநாத விநோதா நமோநம*
*செங்கை மான்மழு வாளா நமோநம*
*செண்ப காடவி நாதா நமோநம.* 1.11-13.

*ஈயறியாப் பூந்தேனே யெழுத்தறியா மறைப்பொருளே*
*காயறியாச் செழுங்கனியே கற்பகத்தின் பசுங்கொழுந்தே*
*தாயறியாக் கருவிலிருந தமுதூட்டுந தாய்த்துணையே*
*நீயறியாச் செயலுண்டோ நிகிலபரம் பரமூர்த்தி.* 1-16-36.
*அன்பருக் கன்பா போற்றி அயனுமா யரியுமாகித்*
*தென்புலவுக் குறைவுநீங்கச் சிவமென நிறைந்தாய்போற்றி*
*முன்பிலா நடுவுமில்லா முடிவிலாப் பிரமமான*
*இன்பமே திருக்குற்றாலத் திறைவனே போற்றிபோற்றி.*
2-3-157.

## திருப்புத்தூர்ப் புராணம்
## கௌரி தாண்டவச் சருக்கம் 13

*அத்திரிகூட வெறபென்றறை திருக் குற்றாலத்தில்*
*சித்திரசபையிற் செய்வோம திரிபுரதாண்டவம் பூம்*
*கத்திகைக் குழலி! ஆலங்காட்டி னிற் காளிதாண்ட*
*வத்தைநன் கியற்றுகிற்போம இரத்தினசபையில் மாதோ.*
*திருச்சிற்றம்பலம்.*

வாழ்க திருக்குற்றாலர், வாழ்க தமிழ், வாழ்க தமிழ்க்கலைகள்,
வாழக சைவம, வாழ்க அடியரெலாம்.

## கோயிலில்வைத்து நடத்தும் கீழ்க்கண்ட விசேடங்களுக்குள்ள

### காணிக்கைகள்.



| | | |
|---|---|---|
| திருமணம் | ரூபாய் | 5—0—0 |
| பூணூல் தரித்தல் | ,, | 2—0—0 |
| சாந்தி | ,, | 3—0—0 |
| சஷ்டியப்தபூர்த்தி | ,, | 2—0—0 |
| காவடி | ,, | 1—0—0 |
| அபிடேகஞ்செய்ய | ,, | 0—8—0 |
| காது குத்தல் | ,, | 0—8—0 |
| முடி எடுப்பு | ,, | 0—8—0 |



